# சிரிக்கவில்லை

கு. அழகிரிசாமி

தமிழ்ப் புத்தகாலயம்
576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.

# சிரிக்கவில்லை

கு. அழகிரிசாமி







தமிழ்ப் புத்தகாலயம்
576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.

சிரிக்கவில்லை (சிறுகதைத் தொகுப்பு)
முதற்பதிப்பு : ஜனவரி, 1952
இரண்டாம் பதிப்பு : அக்டோபர், 1956
மூன்றும் பதிப்பு : ஆகஸ்ட், 1963,
நான்காம் பதிப்பு : ஏப்ரல், 1978

விலை ரூ. 3-50

SIRIKKAVILLAI
Tamil short story collection
by Late G. ALAGIRISAMY

care: Tamil Puthakalayam,
Madras-600 005
Forth Edition : April, 1978
18×12·5 cms
10 Pt. Letter
11·6 kg. White Printing Paper
Cardboard Binding
Annai Anjugam Achagam
TAMIL PUTHAKALAYAM
P. B. No. 411
Triplicane : : Madras-600005,
Price : Rs. 3-50

அச்சிட்டோர் :
அன்னை அஞ்சுகம் அச்சகம்
இராயப்பேட்டை
சென்னை-600014




## உள்ளே...



## ஆசிரியரின் பிற நூல்கள்

அன்பளிப்பு
**(சாகித்ய அகாதமிப் பரிசு பெற்றது)**

கவிச்சக்கரவர்த்தி
**(தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது)**

**தெய்வம் பிறந்தது**

# இந்த நூல்...

சிறந்த சிறுகதை ஆசிரியர்களில் ஒருவர் அமரர் கு. அழகிரிசாமி. அவரது கதைகள் வெறும் உருவ அமைதியைமட்டும் பிரதானமாகக்கொண்டு, கருத்துஅமைதி சற்றேனுமில்லாது தவிக்கும் உயிரற்ற பிண்டங்கள் அல்ல; யதார்த்த வாழ்க்கைக்குப் புறம்பான சொப்பனுவஸ்தைக் கற்பனலங்காரங்களே, அவரது கதைகளில் காணமுடியாது. அழகிரிசாமி யதார்த்தத்துவமான பிரத்தியக்ஷமான வாழ்க்கையைச் சித்திரித்து, அதன் மூலம் பிண்டப் பிரமாண ஜீவ பாத்திரங்களே உயிர் சுமந்து உலவவிடும் சிருஷ்டி கர்த்தா. சிறுகதை என்பது வெறும் பொழுதுபோக்குச் சாதனமாக இல்லாமல், படித்து முடிப்பவரின் சிந்தையில் ஒரு சிறந்த கருத்தை, ஒரு சிறந்த உண்மையைக் கையிருப்பாக விட்டுச் செல்ல வேண்டும். அந்தக் கருத்து அழுகுணிச் சித்தர்களின் அவலக் குரலாகவோ, நம்பிக்கை வரட்சியின் கரகரப்பாகவோ இருக்கக்கூடாது. அதற்குப் பிரதியாக, வாழ்க்கையைப் புரிந்துகொள்ள உதவுவதாக, உண்மையான மனித வாழ்க்கைக்குப் பாதை காட்டும் மணி விளக்கமாக விளங்கவேண்டும். அன்பர் அழகிரிசாமியின் கதைகள் அத்தகைய கதைகள். இந்தத் தொகுதியிலுள்ள ஏழு கதைகளிலும் நீங்கள் பல்வேறு விதமான ரசபேதங் களேக் காணலாம்; ஆனல், அவற்றின் பாவோட்டமாக, அடிநாதமாக விளங்கும் யதார்த்தத்துவத்தை, வாழ்க்கையி லிருந்து புறம்போகாது உண்மைத் தத்துவத்தை மனித ஜீவிதத்திலும் உள்ளத்திலும் துடிக்கும் உணர்ச்சிகளே, அந்த உணர்ச்சிகள் அவரது உள்ளத்தில் எழுப்பிய கருத்துக்களே நீங்கள் கண்டுணர்ந்து கொள்ளலாம்.

அற்புதமான இந்த கதைத் தொகுதியைத் தமிழ் வாசகர்களுக்கு வழங்குவதில் நாங்கள் பெருமையடை கிறேம்; இந்த அரிய தொகுதியை வெளியிடும் சந்தர்ப் பத்தை அளித்து உதவிய அமரர் கு. அழகிரிசாமி அவர் களுக்கு நன்றி.

தமிழ்ப் புத்தகாலயம்




# சிரிக்கவில்லை

மத்தியானம் இரண்டு மணி இருக்கும். ராஜாராமன் வீட்டுக்குள்ளே தனியாகப் படுத்துக் கொண்டிருந்தான். பன்னிரண்டு மணிக்குப் படுத்தவனாதலால் இரண்டுமணிக் கெல்லாம் தூக்கம் கலைந்துவிட்டது. நன்ருகத் தூங்கிய பிறகும், ஒரு பத்துப் பதினைந்து நிமிஷம் தூக்கமும் இல்லாமல் விழிப்பும் இல்லாமல் படுக்கையிலேயே படுத்துக் கொண்டிருப்பது ஒரு சுகமான அனுபவம். அவனுடைய தாயார் எப்போதும் இரண்டு மணிக்கெல்லாம் காப்பி போட்டு வைத்திருப்பாள். அன்று அவளைக் காணவில்லை. ஆகவே விழித்துப் பார்த்ததும் சிறிது நேரத்தில் கண்களை இலேசாக மூடிக்கொண்டு பழையபடியும் படுத்துக் கொண்டான். மறுபடியும் தூக்கம் புது அத்தியாயத்தை ஆரம்பித்தது. இப்போது முக்கால் வாசித் தூக்கம் என்று கூடச் சொல்லிவிடலாம். அந்தச் சந்தர்ப்பத்தில் வாசலில் வெயிலுக்கு மறைவாகக் கட்டியிருந்த படுதாவில் ஒரு நிழல் தெரிந்தது. அம்மாதான் வருகிருள் என்று நினைத்துக் கொண்டு அக்கறை யில்லாமல் திரும்பிப் படுத்துக் கொண்டான். ஒரு நிமிஷம் கழிந்தது; இரண்டு நிமிஷம் கழிந்தது; ஐந்து நிமிஷம்கூட ஆனது. அம்மா வரவில்லை.

'அப்படியாளுல் யார் அது?' என்று எட்டிப் பார்த்தான் ராஜாராமன். நிழலை இப்போது காணவில்லை. உடனே எழுந்தான். வாசலில் திரையை விலக்கிக்கொண்டு பார்த்தான். வெளியே யாரையும் காணவில்லை. வெயில்தான் தகித்துக்கொண்டிருந்தது. தூங்கி விழித்த அவன் கண்கள் கூசின; நெருப்பாக எரிந்தன. வெயில் கொடுமை, கண் எரிச்சல். தாயார் காப்பி போடாமல் எங்கோ போய் விட்டது, வாசலில் வந்து எட்டிப் பார்த்துவிட்டுப் போன

சி.—1

ஆள் இன்னரென்று தெரியாமல் போனது—எல்லாம் சேர்ந்து அவனுக்கு எரிச்சலை உண்டாக்கி விட்டன! கண்ணைக் கசக்கிக்கொண்டே வந்து குப்புறப்படுத்துவிட்டான். அந்தச் சந்தர்ப்பத்தில் தலையணையில் நெற்றியைத் தேய்த்துக் கொள்ளுவது மிகவும் சுகமாக இருந்தது. சாணையிலே கத்தியைத் தீட்டுவது போல, தலையை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் இழுத்து நெற்றியைத் தேய்த்துக்கொண்டே இருந்தான். கொஞ்ச நேரத்தில் பழையபடியும் தூக்கம் வந்துவிட்டது. பாவம்! இரவெல்லாம் விழித்திருந்த அலுப்பு! குழந்தையைப் போல நிமிஷத்துக்கு ஒரு தூக்கம் தூங்கிக் கொண்டிருந்தான். பழையபடியும் படுதாவில் நிழல் தெரிந்தது. படுதாவில் உள்ள சிறு துவாரத்தின் வழியே அந்த நிழலின் கண் எட்டிப் பார்த்தது. கண் மட்டும் நிழலில்லை; உண்மையான கண்தான். பிறகு கொஞ்ச நேரத்தில், அந்த நிழல் பதினறு வயதுப் பெண்ணக மாறி வீட்டுக்குள்ளேயே வந்துவிட்டது.

குப்புறப் படுத்துக்கொண்டிருந்த ராஜாராமனுடைய சட்டை போடாத முதுகையும், பிடரியின் மடிப்புக்களையும் திரண்டு உருண்ட புஜங்களையும் பார்த்துக் கொண்டே நின்றது நிழல்—அதாவது அந்தப் பெண். பிறகு, அங்கே ஜன்னலிலிருந்த கண்ணடியை எடுத்து நேராக நிமிர்த்தி வைத்துப் பக்கத்தில் கிடந்த ஒரு புதுச் சீப்பினல் தன் தலையைப் பட்டும்படாமல் இலேசாக இழுத்துக்கொண்டாள். தலை எற்கனவே வாரப்பட்டிருந்தது.

அந்தக் கண்ணடி ஒரு பொய்க்கால் குதிரை. அதன் பின்னல் அதைத் தாங்கிக்கொண்டிருக்கும் இரும்பு வளையம் காற்றடித்தாலும் 'டப்' பென்று படுத்துக்கொள்ளும். அப்படியிருக்க சீப்பு பலமாகத் தட்டியதைப் பொறுக்குமா? கண்ணடி திடீரென்று எதிர்பாராத விதமாகச் சாய்ந்து விட்டது; 'டபார்' என்று சப்தமும் கேட்டது.

இவ்வளவு நேரமும் மட்டித் தூக்கம் தூங்கிய ராஜா ராமன் சப்தத்தைக் கேட்டதும் 'பளிச்' சென்று திரும்பிப் பார்த்தான்.

பாப்பம்மாள் பரக்கப் பரக்க விழித்துக்கொண்டு நின்ருள். ஒன்றுமே ஓடவில்லை. இலேசாகச் சிரிப்போமா என்றுகூட முயற்சி செய்தாள். சிரிப்பு வரவில்லை.

ராஜாராமனே, "என்ன சப்தம்?" என்று கேட்கவில்லை.

"எப்போ வந்தே?" என்றுதான் இனிமையாகக் கேட்டான்.

தான் கண்ணுடியைத் தாராளமாக எடுத்து உபயோகப் படுத்திய குற்றத்தைக் கண்டு, 'என்ன சப்தம்?' என்று அவன் கேட்டால் சிரித்து மழுப்பிட நினைத்தாள். ராஜா ராமன் இந்தக் குற்றத்தைப் பொருட்படுத்தாமல், வேறு கேள்வியைப் போட்டதனுல் பாப்பம்மாள் சிரிப்பதற்கு அவசியம் நேரவில்லை. உடனே அப்பாவிப் பெண் போல முகத்தை வைத்துக்கொண்டு, "இப்பத்தான் வந்தேன்" என்ருள்.

"என்ன விஷயம்?"

"சும்மா வந்தேன்" என்ருள் பாப்பம்மாள்.

"எப்பக் கேட்டாலும் 'சும்மா'தானு?"

ராஜாராமன் சிரித்தான். பாப்பம்மாள் சிரிக்கவில்லை. அவசியம் இல்லாமலே, "நான் வீட்டுக்குப் போகிறேன்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

"பாப்பம்மா" என்று உரத்த குரலில், ஆனுல் ரகசியம் போலக் கூப்பிட்டான் ராஜாராமன்.

அவள், "நான் போகிறேன்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

பாப்பம்மாள் இப்படித் தினமும் நாலு தடவை ராஜா ராமன் வீட்டுக்குச் 'சும்மா' வருவாள். ராஜாராமன் வீட்டி லிருந்தாலும் இல்லாவிட்டாலும், அவனுடைய தாயார் சமையல் செய்யும்போது மிகவும் அக்கறையாக உட்கார்ந்து அவளுக்கு ஒத்தாசை செய்வாள்! அவள் சொல்லாமலே பாப்பம்மாள் காய்கறிகளை எடுத்து நறுக்கத் தொடங்கி விடுவாள். வீட்டிலே இருப்பது ராஜாராமனும் அவனுடைய தாயாருமாக மொத்தம் இரண்டு உருப்படிகள்தான்.

பாப்பம்மாளோ ஒரு கலியாணத்துக்குக் காய்கறி நறுக்குவது போல வீட்டில் வாங்கி வைத்த காய்கறிகளையெல்லாம் நறுக்கி அம்பாரமாகக் குவித்து வைத்துவிடுவாள். இதைப் பார்த்ததும் இராஜாராமனுடைய தாயார் ஓடிவந்து,

"என்ன வேலை இது பாப்பம்மா! சும்மாயிரு இண்ணுலும் இருக்கயா? இவ்வளவையும் ஒரேயடியாக நறுக்கச் சொன்னது யாரு? எந்திரி, நல்ல வேலை செய்தே, பொம்பிளை!" என்று அங்கலாய்ப்பாள்.

மிகவும் மனவருத்தத்துடன் முகத்தைக் கோணவைத்துக் கொண்டு எழுந்திருப்பாள் பாப்பம்மாள். அப்படியே தன் வீட்டுக்குப் போய்விடமாட்டாள். எழுந்து இப்படியும் அப்படியும் உலாத்திவிட்டு, புழக்கடையிலே கொடியில் காய்ந்து கொண்டிருக்கும் ராஜாராமனுடைய வேஷ்டி சட்டைகளை எடுத்துக் கொண்டு வந்து வீட்டுக்குள்ளே போடுவாள். இதைப் பார்த்தால் ராஜாராமனுடைய தாயாருக்குக் குலை நடுக்கம் எடுத்துவிடும்.

"இதென்னடா அநியாயமா யிருக்கு! பார்க்கிறவுங்களுக்கு இது எப்படி இருக்கும்? வீட்டுக்கு வந்த மருமக மாதிரி, இப்படி வேட்டி சட்டையைத் தூக்கிட்டு அலையரு. இந்தப் பொண்ணு" என்று சத்தம் போட்டுச் சொல்லி விட்டு, "அம்மா! பாப்பம்மா, 'ஒண்ணைத்தானே' ஒங்க அம்மா கூப்பிடருளாம், போய் என்னுன்னு கேளு!" என்று ஒரு பொய்யைச் சொல்லி அனுப்புவாள்.

பாப்பம்மாள் போகும்போது வழக்கம்போலவே "நான் வீட்டுக்குப் போகிறேன்" என்று யாரையும் எதிர்பாராமல் தனக்குத்தானே சொல்லிக்கொண்டு போய்விடுவாள்.

## 1

ராஜாராமனுக்கு ரயிலில் புக்கிங் கிளார்க் வேலை; இந்த ஊருக்கு மாற்றிவந்து ஒரு வருஷமாகிறது. இந்த ஊர் ஒரு குட்டி டவுன். அங்கே ஹோட்டல் சாப்பாடு பிடிக்காமல் தன் தாயாரை ஊரிலிருந்து அழைத்துக்கொண்டு வந்து விட்டான். ஸ்டேஷனுக்கு அருகாமையிலேயே சுமார் ஒரு

பர்லாங்கு தூரத்தில் ரயில்வே உத்தியோகஸ்தர்களின் வீட்டு வரிசை இருக்கிறது. அந்த வரிசையில் இரண்டாவது வீடுதான் ராஜாராமன் வீடு. அந்த ரயில்வே கம்பெனி வீடுகளுக்கு அடுத்தாற்போல ஓர் ஏழெட்டு வீடுகள் இருக்கின்றன. அந்த வீடுகளில் ஒரு வீட்டைச் சேர்ந்தவள் பாப்பம்மாள். அவளுடைய அப்பாவுக்கு ஒரு பலசரக்குக் கடையில் கணக்கு வேலை. அந்தக் கிழவரை ஞாயிற்றுக் கிழமை தவிர மற்ற நாட்களில் வீட்டில் பார்க்க முடியாது. சாப்பாட்டு நேரம் போக மீதி நேரமெல்லாம் கடையில் தான் பெட்டியடியில் கிடப்பார். ஆகவே வீட்டில் பாப்பம்மாளும் அவளுடைய தாயாரும்தான் இருப்பார்கள். நாளெல்லாம் வீட்டிலேயே இருப்பது பாப்பம்மாளுக்குச் சங்கடமாக இருக்கும். அதனால் பக்கத்து வீட்டுப் பெண் ஒருத்தியோடு போய்ப் பல்லாங்குழி விளையாடிக்கொண்டிருப்பாள். அந்தப் பக்கத்து வீட்டுப் பெண் போன மாதம் கல்யாணமாகிப் புருஷன் வீட்டுக்குப் போய்விட்டாள். அதனால், பாப்பம்மாள் இப்போது ராஜாராமன் வீட்டுக்கு முன்போல ஏகதேசமாக வராமல் ஓயாமல் வந்துகொண்டிருந்தாள்; வரும்போதெல்லாம் 'சும்மா' தான் வருவது!

ராஜாராமனுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. நல்ல வாட்ட சாட்டமான உடம்பு. மாநிற மானாலும் பூசி மெழுகிவிட்டது போன்ற பளபளப்பான மேனி. கண்களில் ஈரம் படிந்து குளு குளு என்றிருக்கும். ஒரு வார்த்தை பேசுவதென்றால் ஆயிரம் பொன் கேட்கும் அடக்கமான பேர்வழி. எடுத்ததற்கெல்லாம் சிரிப்பான்; ஆனால் வாய் விட்டுச் சிரிக்கமாட்டான்.

சோம்பேறித்தனம் அவனுக்கு ஒரு சுகபோகம். அதிலும் இப்போது ரயில்வேயில் வேலையான பிறகு, ஒரு வாரம் ராத்திரி வேலையும் ஒரு வாரம் பகல் வேலையுமாகப் போய் விட்டதனால், ராத்திரி வேலை நாட்களில் பகலெல்லாம் உறங்குவான். பகல் வேலை நாட்களிலோ இரவில் உறங்குவதோடு நின்றுவிடுவது கிடையாது. பகலிலும் தூக்கம் வரும். எப்படிப்பட்ட காரியத்துக்குச் சந்தர்ப்பம் கிடைத்தாலும், அந்தச் சந்தர்ப்பத்தைத் தூங்குவதற்குத்தான்

பயன்படுத்துவான். பகலிலும் இரவிலும் கண்கள் சொருகிப் போய் ஒரு மயக்க நிலையிலேயே இருப்பான் ராஜாராமன். அப்படி இருப்பதில் ஒரு கவர்ச்சி இருக்கும். சிலர் எப்படி இருந்தபோதிலும் கூடக் கவர்ச்சி மட்டும் அவர்களை விட்டுப் போகாமலே இருந்து விடுகிறது அல்லவா?

## 2

பாப்பம்மாள் கண்ணாடியைக் கீழே தள்ளிய நாள் போய் சுமார் பத்துப் பதினைந்து நாட்கள் ஆகியிருக்கும். நடுவிலே ஏதோ ஒரு நாள் ராஜாராமனுடைய தாயார்—அந்தப் பெரியம்மாள்—அரிக்கன் லாந்தரின் மூடியைக் கழற்ற முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். அப்போது ராஜாராமனும் வீட்டில் இல்லை. சந்தர்ப்பவசமாக வந்த பாப்பம்மாள், தான் கழற்றுவதாகச் சொன்னாள். பெரியம்மளுக்கோ லாந்தரைக் கொடுக்க இஷ்டமில்லை; ஆனால் பிடிவாதம் பிடித்துக்கொண்டு பாப்பம்மாள் பெரியம்மாளின் கையிலிருந்த லாந்தரைப் பிடித்து இழுத்தாள். உடனே அவள் சிமினியைப் பத்திரமாகக் கழற்றிக் கொண்டு லாந்தரைப் பாப்பம்மாள் கையில் கொடுத்தாள். அதை வாங்கி, பல்லைக் கடித்துக்கொண்டு மூடியைக் கழற்ற முயன்றாள். முடியவில்லை. உடனே தன் சேலை முந்தியை விரலில் சுற்றிக்கொண்டு திருகினாள். எவ்வளவோ நேரம் கழித்து மூடி 'படார்' என்று திறந்தது. ஆனால் திறந்ததோடு விவகாரம் நின்றுவிடவில்லை. லாந்தரில் கொஞ்ச நஞ்சம் இருந்த மண்ணெண்ணெய் இருவர் மேலும் தெறித்து, பக்கத்தில் கிடந்த பாயிலும் கொட்டிவிட்டது.

"அப்போதே சொன்னேன், கேட்டாயா? கொண்டா கொண்டான்னு லாந்தரைப் பிடுங்கிக்கிட்டே!" என்று எப்போதும் இல்லாதவாறு மிகவும் அதிகமாகக் கோபித்துக் கொண்டாள் பெரியம்மாள்.

பாப்பம்மாள் மிகவும் பயந்து போனாள். அன்றுமுதல் அவள் ராஜாராமன் வீட்டுக்குச் சரியாக வருவதே இல்லை. அந்தத் தெரு வழியாக மட்டும் பத்துத் தடவை போய்வரு

வாள். வாசலில் ஈஸிச்சேரில் படுத்துக்கொண்டு பேப்பர் படிக்கும் ராஜாராமனை, போகும்போது ஒரு தடவையும் வரும்போது ஒரு தடவையுமாகக் கடைக் கண்ணால் பார்ப்பாள். ராஜாராமன் சிரித்தால் சிரிப்பாள். இல்லா விட்டால், புருவத்தை இடுக்கிக்கொண்டு, முகத்தையும் 'உம்'மென்று வைத்துக்கொண்டு போய்விடுவாள்.

ஒரு நாள் பாப்பம்மாளுக்கு ஒரே சந்தோஷம் வந்து விட்டது. அவள் வீட்டில் பசு கன்று போட்டுவிட்டது. இந்த 'அதிசயமான' செய்தியைச் சொல்லுவதற்கு ராஜாராமன் வீட்டுக்கு ஓடோடியும் வந்தாள். ராஜா ராமன் வாசலில் உட்கார்ந்திருந்தான். அதை அவள் லட்சியம் பண்ணவே இல்லை. விறு விறு என்று வீட்டுக் குள்ளே போய், வேர்த்து விறுவிறுக்க, பசு கன்று போட்ட செய்தியைச் சொன்னாள். இது வெளியிலிருந்த ராஜாராம னுக்குத் தெளிவாகக் கேட்டது. உடனே ஜன்னல் வழியாக உள்ளே திரும்பி, "கண்ணுக்குட்டிக்குக் கொம்பு ரெண்டா, நாலா?" என்று கேட்டான்.

"ஆமா, எட்டிருக்கும் ஒங்க காலத்திலே!"

"அப்படியானால் ரெண்டு கொம்புதானா? அடேடே இதுக்குத்தானா இப்படி ஓடி வரணும்?"

பெரியம்மாள் சிரித்தாள். பாப்பம்மாள் வேகமாக வெளியில் வந்து ராஜாராமனுக்கு எதிரே நின்று கொண்டாள். ஆள் வந்ததும் ராஜாராமனுடைய ஹாஸ்யம் காற்றில் பறந்துவிட்டது. பேசாமல் தலை குனிந்து கொண்டாள்.

"ஒங்களுக்கு இனிமேல் பால் கொண்டு வரட்டுமா? இந்தா பாருங்கோ" என்று ராஜாராமனின் குனிந்த தலையை வாய்ச் சொல்லாலேயே நிமிர்த்த முயன்றாள் பாப்பம்மாள்.

ராஜாராமன் ஒன்றும் சொல்லவில்லை. ஆகவே, பழைய படியும் "பால் வேண்டாமா? உம்?" என்று ரசசியம்போல் 'குசு குசு' வென்று சொன்னாள். எந்த விஷயத்தையும் ரகசியம் போலச் சொன்னால், அதில் ஒரு கவர்ச்சி ஏற்பட்டு

விடும். ராஜாராமனுக்குப் பாப்பம்மாள் பேசப் பேச மிகவும் சுகமாக இருந்தது.

"ம் ம். பால் கொண்டு வா."

"சரி, நான் வீட்டுக்குப் போகிறேன்" என்று புறப்பட்டாள் பாப்பம்மாள்.

"இந்தா, இன்னிக்குக் கொண்டுவந்துடாதே! நாலு நாள் போகட்டும்" என்று அவன் எச்சரித்தான். அவன் சொன்னதைப் பாப்பம்மாள் கேட்டாளோ இல்லையோ?

மறுவாரம் ராஜாராமனுக்குப் பகல் வேலை. காலையில் கொஞ்ச நேரமும் அப்புறம் சாப்பாட்டுக்காக வரும் நேரமும் தவிர, மீதி நேரமெல்லாம் அவனுக்கு ஆபீசில் வேலை இருந்தது. அதனுல் அந்த வாரத்தில் பாப்பம்மாள் வந்து போனது ராஜாராமனுக்குத் தெரியாது. பால் மட்டும் வீட்டுக்கு ஒழுங்காக வந்துகொண்டிருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டான்.

அதற்கு அடுத்த வாரம் இரவு வேலை வந்தது. பகலில் பாயும் படுக்கையுமாகத்தான் வழக்கம்போல வீட்டோடு கிடந்தான் ராஜாராமன். சாயங்காலக் காப்பிக்காகச் சுமார் நாலரை மணிக்கெல்லாம் பால் கொண்டு வந்துவிடுவாள் பாப்பம்மாள். ராஜாராமனுடைய தாயார், மத்தியானம் இரண்டு மணிக்கு வீட்டு வேலையை ஒதுங்கவைத்துவிட்டு வெளியே போனுல், அப்புறம் திரும்பிவர மணி ஐந்தாகிவிடும். எங்காவது பக்கத்து வீட்டுப் பெண்களுடன் போய்ப் பேசிக்கொண்டிருப்பாள். இந்த நித்திய நியதி ராஜாராமனுக்குத் தெரியும்; பாப்பம்மாளுக்கும் தெரியும். அதனுல்தான் அவள் நாலரைக்குப்பதிலாக நாலுமணிக்கே பால் கொண்டு வரத் தொடங்கினுள். பாலை ஜன்னலில் வைத்துவிட்டு வந்து ராஜாராமன் தூங்கிவிட்டானு என்று எட்டிப் பார்ப்பாள். அவன் முன்பெல்லாம் இந்த நேரத்துக்குத்தான் தூங்கச் செய்வான்; இப்போதோ தூங்குவதெல்லாம் வெறும் பாசாங்கு!

ஒரு நாள் நாலு மணிக்குப் பாப்பம்மாள் வந்தாள். அன்று அவள் புதுப் புடவை கட்டிக்கொண்டு புது ரவிக்

கையும் போட்டுக்கொண்டு வந்தாள். புடவை அலங்காரத் துக்குப் பொருத்தமாக முகத்தைக் கழுவி, சாந்துப் பொட்டு வைத்துக் கொண்டு, தலையிலே பூவும் முடித்துக் கொண்டு வந்து விட்டாள். அன்று அவளுக்கு ஒரே குதூகலம்.

ராஜாராமன் பொய்த் தூக்கத்தில் குறட்டைவிட்டுக் கொண்டிருந்தான். கொஞ்ச நேரத்தில் அவன் தானாகவே எழுந்துவிடுவது வழக்கம். அன்று அவன் விழிக்கும் வரை யிலும் பாப்பம்மாள் சும்மா இருக்கவில்லை. கண்ணாடியை எடுத்துப் பார்த்தாள். சீப்பு இருந்தால் இன்னும் கொஞ் சம் படிய வாரிக்கொள்ளலாம் போல இருந்தது. சீப்பைக் காணவில்லை. ‘சரி, காணோம்; எங்கே இருக்கோ?’ என்று மனத்துக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள்.

ராஜாராமனை எழுப்ப வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. எப்படி எழுப்புவது? அவனுடைய தாயார் “ராசா” என்று அவனை அழைப்பது வழக்கம் பாப்பம்மாள் கொஞ்சம் யோசித்தாள். அப்புறம் தூங்குகிறவனுக்குக் கேட்கவா போகிறது என்று நினைத்து, விளையாட்டாக “ராசா” என்றாள்.

ராஜாராமனுக்குச் சிரிப்பு வந்தது, அடக்கிக்கொண் டான்.

“ராசா” என்று கொஞ்சம் உரக்கச் சொன்னாள். அது வும் விளையாட்டாகவும் ரகசியம் போலவும் இருந்தது.

சிறிது நேரம் கழிந்தது.

நிமிர்ந்து நின்றுகொண்டு, புத்தகத்தைப் பார்த்துப் படிப்பது போல, குரலில் ஏற்ற இறக்கமின்றி “ஏ, ராசா” “ஏ, ராசா” வன்று மூன்று தடவை சொன்னாள்.

ராஜாராமனால் சிரிப்பை அடக்க முடியவில்லை. எழுந்து நின்று இலேசாகத் தலைகுனிந்து கொண்டு, கண்களை மேல் நோக்கித் திரும்பிப் பாப்பம்மாளைப் பார்த்தான். தன் கீழுதட்டைக் கடித்தான். கீழுதடு நனைந்து பளபளத்தது, சீப்பால் தலையைக் கோதுவதுபோல, பல்லால் நாலு தடவை மாறிமாறிக் கீழுதட்டைக் கோதிக்கொடுத்தான்.

'பளிச்'சென்று பாப்பம்மாளின் கையைப் பிடித்துவிட்டான். 'அவள் கையைப் பிடிப்போம்' என்று அவன் எழுந்து நிற்கும் வரையிலும் நினைத்தது கிடையாது. பின்னால் செய்யப் போகிற காரியங்களையும் அவன் நினைத்தவனில்லை; இங்கே தலைகீழ் நியாயமாகச் செயலைப் பின்பற்றித்தான் யோசனை யும் திட்டங்களும் உதயமாயின.

பாப்பம்மாள் ராஜாராமனின் புஜங்களினிடையில் சிக்கினாள். அவன் அவளுடைய முகத்தைத் தன் முகத்துக்கு நேராகத் திருப்பினாள்; அவளுடைய கண்களை ஒரு நிமிஷம் கூர்ந்து பார்த்தான். திடீரென்று அவளை முத்தமிட்டு விட்டான்.

ராஜாராமனுக்கு, முத்தத்தில் சுகானுபவம் பொதிந் திருந்தது. பாப்பம்மாளுக்கோ முத்தம் குஷியாகத்தான் இருந்தது. அவளைப் பொருத்தமட்டிலும் முத்தத்திற்காகத் தான் முத்தம்; வேறு எதற்காகவும் அல்ல!

சந்தர்ப்பங்கள் மாறின். பாப்பம்மாள் வெளியே வந்தாள். 'வெளியே சொல்லக் கூடாது' என்ற ஜாக்கி ரதைதான் பாப்பம்மாளுக்கு இருந்ததே ஒழிய, முத்தத்தில் தன்னை மறந்த உணர்ச்சியோ, பெரிய பயமோ ஏற்படாது போய்விட்டன.

எதிர்பாராதவிதமாக வீட்டுக்குள்ளே வந்த ராஜா ராமனின் தாயாரிடம் பாப்பம்மாள் கொஞ்சங்கூடக் கல் மிஷம் இல்லாமல், "பால் கொண்டுவந்து வச்சுட்டேன்" என்று சொல்லிவிட்டு வாசல் படியில் காலெடுத்து வைத் தாள். அப்புறம் தெருவில் இறங்கிப் போகும்போது அவள் தனக்குத் தானே "நான் வீட்டுக்குப் போறேன்" என்று சொல்லிக் கொண்டாள்.

அது நிலாக்காலம். அன்றிரவு பாப்பம்மாள் ஜன்ன லோரத்தில் கட்டிலைப் போட்டுப் படுத்துக் கொண்டாள். ஜன்னல் கம்பி சந்திரனின் மத்தியபாகத்தில் விழும்படியாக முகத்தைத் தள்ளி வைத்துக் கொண்டாள். இரண்டு கண் களையும் குவித்து ஜன்னல் கம்பியைப் பார்த்தாள். ஆகா யத்தில் இரண்டு சந்திரன்கள் இருப்பது போல் தோன்றி

ய்து. பளிச்சென்று வானத்தை ஏறிட்டுப் பார்த்தாலோ ஒரே சந்திரன்தான். சந்திரனை இரண்டாக்குவதும் பழைய படியும் ஒன்றாக்குவதுமாகப் படுத்துக் கொண்டிருந்தாள் பாப்பம்மாள். அப்போது அவளுக்கு எதிர்பாராத விதமாக உறக்கம் வந்துவிட்டது. 'சரி தூங்கணும்' என்று திரும்பிப் படுத்துக் கொண்டாள். மேலே பார்த்த வாக்கில் வெறும் வெளியை இரண்டு மூன்று தடவை முத்தமிட்டாள். மிகவும் குதூகலமாக இருந்தது அவளுக்கு. 'ரொம்ப நேரமாய் விட்டதே! தூங்கணுமே' என்று ஜாக்கிரதைப் படுத்திக் கொண்டு கண்களை மூடினாள்; கொஞ்சம் நேரத்தில் தூக்கமும் வந்து விட்டது.

வழக்கம் போலவே அவள் தினமும் பால் கொண்டு வந்து வைத்துக் கொண்டிருந்தாள். மறுவாரம் ராஜராமனுக்குப் பகல் வேலை, அதனால் அவன் வீட்டிலே இல்லை. பாப்பம்மாளுக்கு அது ஓர் ஏமாற்றமாகவும் இல்லை. 'அவர் இருந்தால் முத்தமிடுவார்' என்று மட்டும் எப்போதோ ஒரு தடவை சொல்லிக் கொண்டாள்.

## 3

பத்துப் பதினைந்து நாட்கள்தான் கழிந்திருக்கும். ஒரு நாள் திடீரென்று பாப்பம்மாளுக்குக் காய்ச்சல் வந்தது. சாதாரணக் காய்ச்சலைப் போலத்தான் ஆரம்பத்தில் இருந்தது. பிறகு அந்தக் காய்ச்சலே பலத்துவிட்டது. படுத்த படுக்கையாகி விட்டாள் பாப்பம்மாள். அவளுடைய தாயார்தான் பால்கொண்டுவர வேண்டியதாய் விட்டது. பாப்பம்மாள் நாளுக்கு நாள் மெலிந்து கொண்டு வருகிறாள் என்றும், சரியாகச் சாப்பிடாமல் இருக்கிறாள் என்றும் அவளுடைய தாய் சொன்னாள். ஒரு நாள் பாப்பம்மாளைப் பார்க்கப் போனாள் ராஜாராமனுடைய தாயார். ராஜாராமனுக்கும் போகலாம் என்று ஆசைதான். கொஞ்ச நாட்களுக்கு முன் என்றால் தாராளமாகப் போயிருப்பான். இப்போது அவன் மனத்தில் ஏதோ ஒரு திருட்டு உணர்ச்சி ஊசலாடிக் கொண்டிருந்தது. தான் முத்தமிட்டதன்

காரணமாக, பாப்பம்மாளைப் பார்க்கப் போனால் ஊரார் என்ன நினைப்பார்களோ என்று காரணமில்லாமல் பயம் தட்டுப்பட்டது அவனுக்கு. கடைசியில் அவன் போகவில்லை.

முத்தமிட்ட விஷயம் இன்னும் கொஞ்சம் அழுத்தம் பெறுவதற்கு வேறொரு காரணமும் இருந்தது. அந்தத் தினத்திற்குப் பின் நாலைந்து நாட்களில் ராஜாராமனுக்குக் கல்யாணம் செய்ய ஏற்பாடு செய்துவிட்டார்கள். ஊரிலிருந்து அவனுடைய சிற்றப்பா கடிதம் எழுதியிருந்தார். தகப்பனார் காலமாகி விட்டதால் சிற்றப்பாதான் தகப்பனார் ஸ்தானத்தில் இருந்து ஒரு பெண்ணை ஏற்பாடு செய்திருந்தார். அந்தப் :பெண் ராஜாராமனுக்குத் தெரியும். நல்ல பெண் தான். கட்டிக்கொள்ளவும் இஷ்டம்தான். ஒரு மாதத்துக்குள்ளாகவே கல்யாணத்தை நடத்த ஏற்பாடாகிவிட்டது.

கல்யாணம் ஏற்பாடானதும், பாப்பம்மாள் அந்நியப் பெண் என்றும், யாருக்கோ மனைவியாகப் போகிறவள் என்றும், ராஜாராமனுக்குத் தோன்றியது. ஒரு கன்னிப் பெண்ணை முத்தமிட்டது பிசகு என்றும் அவனுக்குத் தோன்றியது. ஆகவே, பாப்பம்மாள் சம்பந்தப்பட்ட எந்தக் காரியத்தைச் செய்யவும் அவனுக்குக் கொஞ்சம் அச்சம் தான்.

ராஜாராமனுடைய கல்யாண சமாச்சாரம் தெரிந்தது பாப்பம்மாளுக்கு. உடனே அவளுக்குச் சந்தோஷம் வந்து விட்டது. கல்யாண வீட்டின் கோலாகலம் அவள் கண்முன் வந்து நின்றது. கொஞ்ச நேரத்தில் அவளுக்கு வேறொரு அபிப்பிராயமும் தோன்றியது. 'அவரை நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளட்டுமா!' என்று நினைத்தாள். நினைத்தால் உடனே நடந்துவிடக்கூடிய சர்வ சாதாரணமான காரியமாகத்தான் பாப்பம்மாளுக்குப் பட்டது. ஆனால் அந்த யோசனையும் திடீரென்று மாறிவிட்டது. 'அதெப்படி முடியும்? அவர் வேறே சாதி; நான் வேறே சாதி. கல்யாணம் செய்துகொள்ள முடியாதே' என்று நினைத்துக்கொண்டாள். அப்புறம், 'கல்யாணத்துக்கு நான் புதுச் சீலை கட்டி, புது ரவிக்கை போட்டுக்கிட்டுப் போகணும். அதுவரைக்கும்,

அந்தப் புதுச் சீலையையும் ரவிக்கையையும் அழுக்காக்கிறக் கூடாது. என் உடம்பும் அதுக்குள்ளே தாவலையாகிப் போகணும் கடவுளே' என்று கடவுளைக் கும்பிட்டாள்.

## 4

ராஜாராமனுடைய சொந்த ஊரிலேயே கல்யாணம் நடந்ததால், புதுப் புடவையும் புது ரவிக்கையும் இருந்தும் பாப்பம்மாள் கல்யாணத்துக்குப் போக முடியவில்லை. உடம்பெல்லாம் குணமாகிப் பழையபடியும் வீட்டிலே நில்லாமல் இங்கும் அங்கும் போய்க் கொண்டிருந்தாள்.

சில தினங்களில் ராஜாராமன் தன் மனைவியோடு உத்தியோக ஸ்தலத்துக்கு வந்துவிட்டான். வந்த தினத்தன்று பாப்பம்மாள் வீட்டுக்குப் பலகார பண்டங்களெல்லாம் கொடுத்தனுப்பினுள் பெரியம்மாள்.

பாப்பம்மாள் ராஜாராமன் வீட்டுக்கு வருவதற்கு இடையூறாக இப்போது இரண்டு தடங்கல்கள் இருந்தன: ஒன்று, யாரோ ஒரு புதுப் பெண் வந்துவிட்டது. அவள் இருக்கும் போது பாப்பம்மாளுக்கு அந்த வீட்டில் நடமாடுவது அவ்வளவு உற்சாகமாயில்லை; தவிரவும் அந்த வீட்டில்தான் செய்த வேலைகளை எல்லாம் அந்தப் புதுப் பெண்ணே செய்து வந்தாள். அங்கே போய்ச் சும்மா உட்கார்ந்து கொண்டு இருப்பது எப்படி?

அடுத்தபடியாகப் பாப்பம்மாளின் தாயார், "இனிமேல் நீ அங்கே அடிக்கடி போகக் கூடாது" என்று பாப்பம்மாவிடம் சொன்னுள்.

பாப்பம்மாளுக்குக் கொஞ்சம் கஷ்டமாகவே இருந்தது. ஆனுலும் ஏகதேசமாக நாலைந்து நாட்களுக்கு ஒரு தடவை வந்து ராஜாராமன் மனைவியிடம் பூவோ, ரிப்பனே கொண்டு போவாள்; தான் பூ வாங்கினுலும் அவளுக்குக் கொண்டுவந்து கொடுப்பாள். சில நாட்களில் அவனுடைய மனைவியிடம் அவளுக்குப் பிரியம் உண்டாகி விட்டது. தன் தாயாரிடம் எப்போதும் ராஜாராமன் மனைவியைப் பற்றி ஏதாவது சிலாகித்துச் சொல்லிக்

கொண்டிருப்பாள். அவளைப் பற்றிப் பேசாவிட்டால் பாப்பம்மாளுக்கு நெஞ்சு வெடித்துவிடும்.

இப்போது பாப்பம்மாளோ அவளுடைய தாயாரோ யாராவது ஓர் ஆள் பால் கொண்டுவருவது வழக்கம். சில நாட்களில் பசுவில் பால் வற்றிவிட்டது கன்றுக்குட்டிக்கே அவ்வளவு பாலையும் விட்டுவிட்டார்கள். பால் விவகாரம் நின்றுவிட்டது.

இப்போது ராஜாராமன் வீட்டுக்குப் பாப்பம்மாள் போவதென்றால் பழையபடியும் 'சும்மா'தான் போகவேண்டியதாய் விட்டது. ராஜாராமன் தன் மனைவியைப் பக்கத்தில் வைத்துக்கொண்டே பாப்பம்மாளைப் பார்த்துக் குறும்பாக ஏதாவது சொல்லுவான். புருஷனும் மனைவியும் சிரிப்பார்கள். இது பாப்பம்மாள் மனதுக்குச் சந்தோஷமாக இருக்கும். சில சமயங்களில் ராஜாராமனின் முன்னிலையிலேயே பாப்பம்மாள் அவன் மனைவியை அதட்டுவது உண்டு. 'அப்படிச் செய்யலாமா? இப்படிச் செய்யலாமா' என்று ஏதாவது சொல்லுவாள். ஒருநாள் ராஜாராமனின் வேஷ்டி கொடியிலிருந்து விழுந்து தரையில் கிடந்ததைக் காட்டி, 'இதை எடுத்து வைக்கவில்லையே?' என்று அவனுடைய மனைவியைக் குற்றம் சாட்டுவது போலச் சொன்னாள். பிறகு அவளே போய் எடுத்து வைத்தாள்.

ராஜாராமன் தனக்குள்ளாகவே நினைத்துக்கொண்டான் :

'அவளுக்கில்லாத அக்கறையா பாப்பம்மாளுக்கு? நான் கண்டிப்பதைப்போல அல்லவா பாப்பம்மாள் அவளைக் கண்டிக்கிறாள்! என் விஷயத்தில் எவ்வளவு அக்கறை!'

## 5

ஏழெட்டு மாதங்களுக்கு மேலாகிவிட்டன. பாப்பம்மாள் தெருவோடு போகும்போது, நாள்தோறும் ஒன்றுபோல ராஜாராமனைப் பார்த்துச் சிரிப்பதும், அவன் பதிலுக்குச் சிரிப்பதும், ஏகதேசமாக அவனுடைய வீட்டுக்கு வந்து உரிமையுடன் நடந்து கொள்ளுவதும் நிற்கவில்லை, வழக்கம்

போல நடந்துகொண்டுதான் இருந்தது. இந்தச் சமயத்தில் ராஜாராமனின் மனைவி கர்ப்பிணியாக இருந்தாள். அவள் ஊருக்குப் போய் ஒரு மாதத்திற்கு மேலாகிவிட்டது. 'அடுத்த மாதம்தான் அவளுக்கு மாதம்.' பிறகு இரண்டு மாதங்களில் அவள் குழந்தையை எடுத்துக்கொண்டு வருவாள் என்று ஒரு நாளைக்கு நூறு தடவை மனதுக்குள்ளேயே மாறி மாறிச் சொல்லிக் கொண்டிருந்தான் ராஜாராமன். அவனுக்குக் கனவும் நனவும் அதுதான். பத்துப் பதினைந்து நாட்களுக்கு ஒரு தடவை போய் மனைவியைப் பார்த்துவிட்டு வருவதும், வாரத்துக்கு ஒரு தடவை கடிதம் எழுதுவதுமாக இருந்தான்.

அடுத்த மாதத்திலேயே குழந்தை பிறந்தது. ஆண் குழந்தை. இந்தச் செய்தியைப் பாப்பம்மாள் கேள்விப் பட்டாள். அப்பொழுதுகூட அவளிடம் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. ஆனால் குழந்தையை எடுத்துக்கொண்டு ராஜராமனுடைய மனைவி வந்ததும் கதை எல்லாம் தலை கீழாக மாறிவிட்டது. பாப்பம்மாளுக்கு உலகமே புரண்டது போலிருந்தது.

ஒரு நல்ல நாளன்று குழந்தையோடு வந்து சேர்ந்தாள் ராஜாராமனின் மனைவி. அவள் வந்த சிறிது நேரத்திற்குள் மிகவும் உற்சாகத்துடன் ஓடோடியும் வந்தாள் பாப்பம்மாள். வந்து ஆவலோடு குழந்தையைப் பார்த்தாள். ராஜராமனுடைய சாயலிலேயே இருந்தது குழந்தை. அதிலும் குழந்தையின் புன்சிரிப்பு ராஜாராமனின் புன்சிரிப்பேதான். தாமரை இதழ்களின் வெளி வரிசையும், உள் வரிசையும் உருவத்தில் பெரிதும் சிறியதுமாக இருந்தாலும், அமைப்பு ஒன்றுபோலவே இருப்பது மாதிரி இருந்தன அந்த இரண்டு பேரின் புன்னகைகளும்!

இதைப் பார்க்கும்போது பாப்பாம்மாளுக்கு என்னவோ போலிருந்தது. அவளுடைய ஏதோ ஒரு நம்பிக்கை அடிப் படையோடு சாய்ந்து விழுந்து விட்டது. ராஜாராமன் அவன் மனைவிக்குத்தான் சொந்தம் என்பதைக் குழந்தை ஒவ்வொரு கணமும் சிரித்துச் சிரித்து நிரூபித்தது.

ராஜராமானுல்தான் அவள் குழந்தை பெற்ருள். குழந்தையோ அவன் குழந்தை. ஆனுல் பிறந்தது அவள் வயிற்றில். கல்யாணமானுல் இப்படிக் குழந்தை பிறக்கத் தான் செய்யும் என்பதைப் பாப்பம்மாள் முன்பு நினைத்த தாகத் தோன்றவில்லை; நினைக்காதது போலவும் தோன்ற வில்லை. எப்படியும் குழந்தை பிறந்துவிட்டது. அப்படி யானுல் அவன் அவளுக்கு எப்போதோ சொந்தமாகிவிட் டான். இப்போது பாப்பம்மாள் யார்? குழந்தை பெருத பாப்பம்மாள் யார்?

எழுந்து வெளியேவந்தாள். ஒருவரோடும் ஒன்றும் பேச வில்லை வழக்கம்போல 'நான் வீட்டுக்குப்போகிறேன்' என்றும் அவள் சொல்லவில்லை, மிகவும் வேகமாகத் தன் வீட்டை நோக்கி நடந்தாள். வீட்டுக்குப் போய்ப் படுக்கை யில் விழுந்ததும் அவளுக்கு அழுகை வந்துவிட்டது. 'மூஸ் மூஸ்' என்று நாலைந்து தடவை அழுதாள்; விம்மினுள். ஒரு நிமிஷத்திற்குள் அழுகை நின்றுவிட்டது. ஆனுல் பழையபடியும் மறுநிமிஷத்தில் அழுகை வந்து விட்டது. இப்படியே நிறுத்தி நிறுத்தி நாலைந்து தடவைகள் அழுது விட்டாள்.

அவளுடைய மானசீகப் பற்றுவரவுக் கணக்கில் ஒரு பெரிய தப்பு விழுந்துவிட்டது. பற்று வரவுக் கலங்களில் வரவு வைக்கவேண்டியதைப் பற்று என்ரே, பற்று என்று எழுத வேண்டியதை வரவு என்ரே பதிவு செய்துவிட் டாள். கணக்குப் பார்த்தால் மாறி மாறித் தப்பு விழுந்து கொண்டிருந்தது.

மறுநாள்—மறுநாள் என்ன? எல்லா நாட்களும் தான்—ராஜராமனை அவள் பார்க்கத்தான் செய்தாள்; ஆனுல் முன்போல் சிரிக்கவில்லை. ராஜராமன் சிரித்தாலும் அவள் சிரிக்கவில்லை. அவனைப் பார்த்தால் அவளுக்கு ஐந்தாறு தடவை இமை கொட்டும். முகத்தையும் 'உம்' மென்று வைத்துக்கொள்ளுவாள். 'டு' விட்டுக்கொண்ட குழந்தை போல, வேண்டுமென்றே கோபித்துக்கொண்டு தன் வீட்டுக்கு வந்து விடுவாள் பாப்பம்மாள்.

# பெரிய மனுஷி

கண்ணன் வழக்கம்போல ராஜத்தைப் பார்த்து வர லாம் என்று மதுரைக்குப் புறப்பட்டான். அதற்காக ஞாயிற்றுக்கிழமையை ஒட்டிமேற்கொண்டு இரண்டுநாள் லீவு போட்டிருந்தான். ராஜத்தைப் பார்த்து ஒரு மாதமாகி விட்டது. தவிரவும் வாரத்துக்கு ஒரு கடிதம் தவருமல் எழுதி வந்தவள் சென்ற மூன்று வாரங்களாகத் தன் க்ஷேமலாபத்தைப்பற்றி ஒரு கார்டு கூடப் போடவில்லை. மிகவும் நீண்டதாக இரண்டு கடிதங்கள் கூட எழுதியிருந் தான் கண்ணன். அவற்றிற்கும் பதில் கிடையாது. எனவே அவசர அவரசமாகச் சனிக்கிழமை மத்தியானம் மெயிலுக் குக் கிளம்பினுன்.

ராஜம் தலைக்குழந்தைப் பிரசவத்துக்காக மதுரைக்குத் தன் தாய் வீட்டுக்குப் போயிருக்கிறுள். போய் நாலைந்து மாதங்கள் இருக்கும். இணைபிரியாதிருந்த இந்தக் "குழந் தைத் தம்பதிக"ளால் கல்யாணமான ஆருவது மாதத்தி லேயே நேர்ந்த இந்தப் பிரிவைச் சகிக்கமுடியவில்லை. ஆரம் பத்தில் ஒரு ஞாயிற்றுக்கிழமை விட்டு ஒரு ஞாயிற்றுக் கிழமை கண்ணன் மதுரைக்குப் போய் வந்தான். வாரம் தவருமல் இருவரும் கடிதம் எழுதிக்கொள்ளுவார்கள். இப் போது ராஜத்தின் மனதைச் சோதிப்பதுபோல, வழக்கம் போல் போவதை நிறுத்தி ஒரு மாதத்துக்குப் பிறகு புறப் படலாம் என்று கண்ணன் திட்டம் செய்திருக்க, ராஜமோ கடிதம் எழுதுவதையே நிறுத்தி விட்டாள்.

இதை நினைக்கும்போது ராஜத்தின்மேல் கோபம் கோப மாக வந்தது கண்ணனுக்கு. என்னென்னவோ கிறுக்கி பைத்தியம் போல இரண்டு நீண்ட கடிதங்களை எழுதிய தற்கு ஏனென்று கேட்காமல் இருக்கிறுள் ராஜம். 'என்ன

கரீவம் வந்துவிட்டதாம் திடீரென்று! ஏதாவது ஒன்று தன்னிஷ்டப்படி நடக்காவிட்டால் மட்டும் கோபம் முன்னே வந்து நிற்கிறது. ஆனால், மற்றவர்களுக்கும் இருதயமும், இன்ப துன்பமும் இருக்கிறதென்ற நினைப்பு வேண்டாமா?'

ரயிலில் உட்கார்ந்துகொண்டிருக்கும் கண்ணனுக்குக் கோபம் பிரமாதமாய் வந்தது. இதற்கு முன்னால் இவன் ராஜத்தைப் பார்க்கப் போகும்போது தன் வீட்டுக்குத்தெரியாமல் நல்ல பழங்கள், அவளுக்குப் பிடித்தமான அருமையான புதுப் புத்தகங்கள்—இவைகள் சகிதமாகத்தான் கிளம்புவான். உள்ளத்தில் ஆனந்தம் தாங்காது. ஆனால், இப்போது மேற்படி சாமான்கள் ஒன்றுமே வாங்கிக் கொள்ளவில்லை. ராஜத்தின் எதிரில் போய் ஒன்று பாரா முகமாய் அலட்சியமாக நடந்துகொள்ளவேண்டும்; இல்லா விட்டால் வெட்டு ஒன்று துண்டு இரண்டாக நாலு வார்த்தைகள் பேசிவிட்டுச் 'சட்புட்' என்று ஊருக்குத் திரும்பி விடவேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டான்.

ரயில் ஏறக்குறையப் பாதி தூரத்துக்கு மேலேயே போய்விட்டது. கண்ணன் எப்படியோ தன் ஸ்வாரஸ்யமான கோபத்தை மறந்து விட்டான். இப்போது ராஜத்தைப்பற்றிய கவர்ச்சியான நினைவு அவன் மனத்தில் துரு துருவென்று குருத்து விட்டது. உள்ளத்தில் இன்பத்தின் அரிப்புத் தாங்கமுடியவில்லை. இப்போது அவனுக்கு எதைத் தொட்டாலும் மனத்துக்குக் கூச்சமாக இருந்தது. சரியாக உட்கார முடியாமல் தவித்துக்கொண்டிருந்தான்.

சிந்தனையலை இப்படிப் புரண்டு பாய்வதற்குக் காரணம் இருந்தது. ராஜம் மதுரைக்குப்போய் எவ்வளவு நாட்களாகின்றன என்று கண்ணன் யோசித்தான். தினம் தினமும் அவன் இப்படி யோசிப்பதுதான். நாள் கணக்குக்கூட ஞாபகம் இருக்கும். என்றாலும் ஒருபிடித்தமான ராகத்தை மாறிமாறிப் பாடி ரசிப்பதில்லையா? அதுபோல ராஜத்தின் பிரிவை நாள் கணக்கில் எண்ணிக்கை போட்டுப் பார்த்துக் கொள்வதில் அவனுக்கு ஒரு ருசி தட்டுப்பட்டது.

இதுதான் அவளுக்கு மாதமாக இருக்கும்! இதுவே தான்...இந்த இடத்தில் அவன் சிந்தனை யோட்டம் சற்று நின்றது. பழைய கோபத்தில் சாயையும், அதன்பின் படிந்த இன்ப நிழலும் இப்போது மறைந்துவிட்டன. மனம் சற்றுக் கவலையில் தோய்ந்தது.

ராஜம்...இன்னும் பதினைந்து வயது நிரம்பாத சிறு குழந்தை. உலகமே இன்னதெனத் தெரியாது. வாழ்க்கையின் இன்ப துன்பங்களில் பட்டு நசுங்காதபடி இது வரையும் தாய் வீட்டிலும், கணவன் வீட்டிலும் செல்வமாக வளர்ந்து வந்தவள். கண்ணனுக்குச் சற்று கவலையைத் தந்தது ராஜத்தின் இப்போதைய நிலை. அவனுடைய தாயார் இந்தச் சிறு குழந்தையின் பிரசவத்தை எண்ணி ஏகதேசமாக வருத்தப்பட்டுக் கொண்டது அவனுக்கு இப் போது புரிந்தது. மதுரை மீனுக்ஷியம்மனை மனதுக்குள் ளேயே நன்ருகப் பிரார்த்தனை செய்துகொண்டான். வேறு வழியில் அவன் மனம் செல்லாமல் இருக்க இந்தப் பிரார்த் தனை உதவியது.

இன்னும் கொஞ்ச தூரந்தான் இருக்கும். கண்ணன் நிலைகொள்ளாமல் தவித்தான். ரயில் போய்க்கொண் டிருந்தது.

* * *

காலை பத்து மணி முதல் ராஜத்தின் வீட்டில் என்று மில்லாத பரபரப்பு. ஒன்றும் விளங்காமல் இருந்த ராஜத் துக்கு இதைக் காணப் பயமாக இருந்தது. இந்தப் பர பரப்பின் காரணம் கொஞ்சம் நேரம் கழித்து அவளுக்குத் தானே விளங்க ஆரம்பித்துவிட்டது; வாழ்க்கையை விளை யாட்டுப் பொம்மையாக வைத்து விளையாடிய குழந்தைக்கு இந்தப் புது அனுபவத்தைப் பொறுத்துக்கொள்ள முடிய வில்லை.

வீட்டுக்கும் வாசலுக்கும் ஒரே ஓட்டமாக ஓடிக் கொண்டிருந்தாள் ராஜத்தின் தாயார். பக்கத்து வீட்டுக் கிழவியும் மருத்துவச்சியும் வந்து அவளருகில் இருந்து தேற் றிக் கொண்டிருந்தனர். ராஜம் மிரள மிரள விழித்தாள்.

தாய் தந்தையர்களும் பக்கத்தில் இருப்பவர்களும் தனக்காகத் தன் கஷ்டத்தைப் பகிர்ந்து அனுபவிக்க மாட்டார்களா என்று இருந்தது அவளுக்கு. உலகம் தோன்றியதிலிருந்து என்றுமே கண்டறியாத ஒரு புதுத் துன்பத்தில் தான் மட்டும் முதன் முதலில் அகப்படுக் கொண்டதைப் போல் நினைத்துக் கஷ்டப்பட்டாள்.

ஏறக்குறைய ஒன்றரை மணி நேரம் இப்படியே எதுவும் சொல்ல முடியாமல் இருந்தது. இப்படி எத்தனையோ அனுபவங்களைக் கண்ட மருத்துவச்சி கூடச் சற்று மனம் சோர்ந்தாள். அவள் முகத்தையே ராஜம் உட்பட எல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். திடீரென்று, விறுவிறுவென்று வாசலுக்கு ஓடினாள் ராஜத்தின் தாய். வெளியே உட்கார்ந்திருந்த நாலைந்து ஆடவர்கள் ஒரு முகமாய்த் திரும்பிப் பார்த்தனர். உள்ளேயிருந்து ஒவ்வொரு பெண்ணும் வரும்போது நற்செய்தி கிடைக்காதா என்று எல்லோரும் எத்தனையோ தடவை திரும்பிப் பார்த்துவிட்டார்கள். இப்போதும் அவர்களுக்கு ஆறுதல் அளிக்க ஒரு வார்த்தையும் சொல்லுவதற்கில்லை. ஆஸ்பத்திரிக்குப் போய் லேடி டாக்டரை அழைத்துவர வேண்டியதுதான் எனத் தெரிவித்தாள் ராஜத்தின் தாயார். உடனே அவளுடைய வீட்டுக்காரரர் எழுந்து ஓடினார். வழி நெடுக மீனாக்ஷியைப் பிரார்த்திக்கொண்டு கையையும் காலையும் உதறியவண்ணம் நடந்து சென்றார்.

ஆஸ்பத்திரிக்குப் போய் டாக்டரையும் நர்ஸையும் அழைத்து அவர்களைக் காரில் அனுப்பிவிட்டுத் தபாலாபீசுக்குப் போய், கண்ணனை உடனே புறப்பட்டு வரும்படி தந்தி கொடுத்துவிட்டுத் திரும்பினார் அவர். கொஞ்ச நேரத்தில் வீட்டிற்கு வந்தார். இவர் வருவதற்கு முன்பாகவே வீட்டின் வாசல் திண்ணையில் வந்து குற்றவாளியைப் போல் தலையைக் குனிந்த வண்ணம் முழங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தான் கண்ணன். அவனைப் பார்த்ததும் வரவேற்கும் தோரணையில் தலையை மட்டும் அசைத்

தார் மாமனுர். அவர் குரல் வெளி வரும்போதே விக்கிக் கொண்டது. கண்ணனும் பதிலுக்கு தலையசைத்தான்.

அப்போது, பக்கத்துத் தெருவில் குடியிருக்கும் சுப்ர மணியப் பண்டாரத்தை யாரோ போய் அழைத்து வந் திருந்தார்கள். அவர் தம் விபூதிச் சம்புடத்தை எடுத்து உள்ளங்கையில் சிறிது விபூதியைக் கொட்டி ஏதோ மந்தி ரித்துக் கொடுத்தார் ராஜத்தின் தாயாரிடம். அவள் அதை வாங்கிக்கொண்டு வீட்டுக்குள்ளே ஓடினுள்.

விபூதியைக் கொடுத்துவிட்டு மாப்பிள்ளையை ஏற இறங்கப் பார்த்தார் பண்டாரம். மாப்பிள்ளைக்கே வயது இருபத்தொன்றுக்குள்ளாக இருக்கும்போது பெண்ணுக்கு என்ன வயது இருக்கும் என்று யோசித்தார். தம் சந்தே கத்தைப் பக்கத்திலிருப்பவர்களிடம் கேட்டார். உடனே யாரோ ஒருவர் இன்னும் பதினைந்து வயது நிரம்பியிருக்காது என்ருர்கள். பண்டாரம் சிரித்தார். அவர் சிரித்தது உலக மாயைகளின் ஆட்ட பாட்டத்தைக் கண்டு ஒரு ஞானி சிரிப் பதுபோல இருந்தது.

அவர் சிரித்ததைக் கண்டு ராஜத்தின் தகப்பனுர் மிகவும் கலவரமடைந்தார். கொஞ்ச நஞ்சம் தைரியத்துடனிருந்த கண்ணனுடைய மனமும் கவலையில் மூழ்கியது. பதினைந்து வயதுச் சிறுமி, ஒரு சிறு குழந்தை, இந்தக் கஷ்டம் அனு பவிக்க நேர்ந்ததற்குத் தன்னையே குற்றம் சாட்டிக் கொண் டான் கண்ணன். அவனுடைய நண்பர்கள் அவனுக்குக் கல் யாணமான புதிதில் விளையாட்டாக ராஜத்தின் சிறு வய தையும் இந்திய நாட்டு ஜனத்தொகையையும் சுட்டிக்காட்டி இரண்டு மூன்று வருஷங்களுக்குக் கர்ப்பத் தடை உபாயங் களைக் கையாளும்படி சொன்ன கேலி வார்த்தைகள் சாரம் நிறைந்தனவாகக் கண்ணுக்குத் தோன்றின. ஒரே விளை யாட்டாக வாழ்க்கை இன்பத்தில் மிதந்து வரும்போது இந்த மாதிரி ஒரு சந்தர்ப்பம் குறுக்கிடுமென்று அவன் ஆரம்பத்தில் கனவுகூடக் காணவில்லை. ராஜத்தைப் போலவே குழந்தை யுள்ளம் படைத்த கண்ணனுக்கு எந்த ஆறுதலும் புலப்பட வில்லை. யாராவது தாயைப்போல் வந்து, சிறு பிள்ளையை ஏமாற்றித் தேற்றுவது மாதிரி தனக்கு ஆறுதல் சொல்லமாட்

டார்களா என்றிருந்தது அவனுக்கு. ராஜத்தைவிடச் சிறு குழந்தையாகி விட்டான் கண்ணன்.

உள்ளேயிருந்து வந்த நர்ஸ் ராஜத்துக்கு ஆண் குழந்தை பிறந்த செய்தியைச் சொன்னாள். திடீரென்று மின்சார விளக்குகள் போட்ட மாதிரி எல்லோருடைய உள்ளங்களும் ஒளி பெற்றன. கண்ணன் தன் மகிழ்ச்சியை எப்படித் தெரிவிப்பான்? உடனே ராஜத்தைப் போய்ப் பார்க்கவேண்டும் என்று அவன் துடியாய்த் துடித்தான். உள்ளே குழந்தை யழுவதும் இலேசாக வெளியில் கேட்டது.

* * *

மாலை ஆறு மணியிருக்கும். வீட்டில் விளக்கின் முன்னே தனியாகப் பெருமிதத்தோடு உட்கார்ந்துகொண்டிருந்தான் கண்ணன். முதல் முதலாக ஒரு குழந்தைக்குத் தந்தையாகப் போய்விட்டோம் என்று நினைக்கும்போது தான் உள்ளத்தில் என்ன பெருமிதம் எழுகிறது! அந்த அறையில் வேறு எவருமே இல்லை. அவனுடைய மாமனார் எங்கோ வெளியே போயிருந்தார். வீட்டின் மற்றொரு கோடியில் ஏகதேசமாகக் குழந்தையழும் குரலும் ராஜத்தின் தாயார் இங்கும் அங்கும் நடந்து செல்லும் ஓசையும் கேட்டது. கண்ணன் ராஜத்தைப் பார்க்க ஒவ்வொரு நிமிஷமும் துடித்தான். தான் போய்ப் பார்க்கும்போது யாரும் வந்து விடுவார்களோ என்ற வெட்கத்தினால் பேசாமல் உட்கார்ந்து கொண்டிருந்தான். வெண்ணிலாவின் கிரணங்கள் ஜன்னல் வழியாக உள்ளே விழுந்து கொண்டிருந்ததால், விளக்கை அணைத்துவிட்டு நிலவைப் பார்த்துக் கொண்டே என்னென்னவோ எண்ணமிட்டான் கண்ணன்.

தான் ஓர் ஆண்பிள்ளை; வயதும் இருபத்தொன்று ஆகியிருக்கிறது. ஏதோ தனக்கு உலகத்தின் கஷ்ட நஷ்டங்கள் இன்னதென்று தெரியும்; அவற்றைச் சகித்துக் கொள்ளவும், சகித்துக்கொள்ள வேண்டியது அவசியம் என்பதும் தெரியும் ஆனால் ராஜம்? ஒரு சிறு கஷ்டத்திற்கும் பீதியடைகிறவளுக்கு, இன்று அனுபவித்த கஷ்டம் என்ன பாடம் கற்பித்திருக்கும்? உலகத்தில் இது சகஜம் என்பது அவளுக்குத் தெரி

யுமா? அதிலும் என் துரதிர்ஷ்டம், இந்த முதல் பிரசவத்திலேயே அவளுக்கு ஓர் எச்சரிக்கை மாதிரி இப்படி கஷ்டம் நேர வேண்டுமா?

இனி, தான் அவள் கண் முன்பாகப் போய் நின்ருல் அவளுக்குப் பயம் நடுக்கமெடுத்துவிடும். தன்னைப் பார்த்தால் அவளுக்கு எப்படிப் பயங்கரமாகத் தோன்றப் போகிறதோ? இனி எப்படி அவளுடைய வார்த்தைகளில் முன்போலப் பால் சுரக்கப் போகிறது? அன்பின் நைப்பு அவளுடைய சொற்களில் இனியும் பசையைப்போல ஒட்டிக் கொண்டிருக்குமா? எத்தனை கஷ்டங்கள் வந்தாலும் அவளுடைய நினைப்பு, தனக்கு ஓர் இன்பத் தேனுக மனசில் ஊறிப் பொங்கியது. ஆனுல் இதே மனப்பாங்கு அவளுக்கும் இருக்க வேண்டுமென்று பாடமா கற்பிப்பது?

யாரோ அறையின் கதவை இலேசாகத் திறந்தார்கள். ராஜத்தின் தாயார்தான். கண்ணனும் விளக்கைப் போட்டுவிட்டு எழுந்தான். ஏதோ சில பழங்களைத் தட்டில் எடுத்துக்கொண்டு வந்து வைத்துவிட்டு, அவனுடைய கண்ணெதிரிலேயே 'வீட்டைப் பூட்டிக்கொள்ளுங்கள்!' என்று சொல்லாமல் தெரிவித்த மாதிரி வெளியே ஏதோ வேலையாகச் சென்றுவிட்டாள். அவள் போகும்போது கதவை இழுத்துப் பூட்டிக்கொண்டு போனது, அவள் திரும்பிவரச் சற்று நேரமாகும் என்பதைக் கண்ணனுக்குத் தெரிவித்தது. சிந்தனையற்று ஓர் ஆரஞ்சுப் பழத்தைக் கையிலெடுத்தான். சிறிது நேரம் கழித்துப் பழையபடியும் அதைத் தட்டிலேயே வெத்துவிட்டான். தலையைக் குனிந்தவண்ணம் யோசனையில் ஆழ்ந்தவனுக எழுந்து விளக்கை அணைத்துவிட்டு வெளியே வந்தான். வாசற் கதவையும் போய்த்தாளிட்டுவிட்டு அங்கிருந்த விளக்கையும் அணைத்தான்.

ராஜத்தின் அறையில் இருந்த விளக்கு வெளிச்சம் கதவிடுக்கு வழியாகக் கோடு போட்ட மாதிரி தெரிந்தது. கொஞ்சம் யோசித்து நின்ருன். கடைசியில் தாழிட்டுப் பூட்டிய வீட்டை ஒரு முறை சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்துவிட்டு ராஜத்தின் அறையைப் பார்த்து நடந்தான்.

கதவை மெதுவாகத் திறந்து உள்ளே தலையை நீட்டும் போது ராஜம் தலையணையில் தலையைச் சாய்த்தவாறு சிறிது வலது பக்கமாக வாசலுக்கு நேராகத் திரும்பிப் பார்த்தாள். எதிரில் வந்து நின்றான் கண்ணன்! புன்சிரிப்பை வரவழைக்க முயன்றும் முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டு நின்றான்! அவன் முகத்தில் நவரசங்களின் இலக்கணத்துக்கும் அடங் காத ஒரு தனித்த பாவம் குடிகொண்டிருந்தது.

ராஜம் திடீரென்று புருவத்தை உயர்த்தி நுனிநாக்கை இலேசாகக் கடித்துக்கொண்டு 'என்ன போக்கிரித்தனம் இது!' என்று சொல்லுவதைப்போல் முறுவல் செய்தாள். கண்ணனுக்குக் கொஞ்சம் உயிர் வந்தது. என்றாலும் எதற்கோ பயந்தவனாய்ப் பக்கத்தில் அண்டாமல் தனியே நின்றான். கொழு கொழு என்று சதை பிடித்த குழந்தை ராஜத்தின் பக்கத்தில் உறங்கிக் கொண்டிருந்தது.

கண்ணன் ஒன்றும் பேசாமல் ராஜத்தின் முகத்தைப் பார்த்தான். பயந்துபோன 'குழந்தை'க்கு முன், தான் ஒரு பயங்கர ஆசாமியாகப் போய் நிற்பதாகக் கண்ணன் மனத்துக்குள் பாவித்துக்கொண்டான். ஆனால், 'குழந்தை' உலகத்தின் அனுபவத்தை யெல்லாம் கண்டு தெளிந்த ஒரு பெரிய மனுஷியைப்போலச் சிரித்தாள்.

கண்ணனுக்குப் புரியவில்லை! அவனுடைய பழைய பயமும் விடவில்லை.

"ஏன், பக்கத்தில் வந்தால் தீட்டுப்பட்டு விடுமா!" என்று சொல்லிக்கொண்டே இந்தக் 'குழந்தை'யைப் பார்த்துக் கைகளை நீட்டினாள் ராஜம்.

# திரிபுரம்

பஞ்சம் வந்துவிட்டது.

பஞ்சம் வந்து விட்டால் என்ன? மக்கள் பட்டினி கிடப்பதோடு மட்டுமல்லாமல் மற்ருெரு பரிதாபகரமான காரியத்தையும் செய்வார்கள். அதாவது ஒரு பஞ்சப் பிரதேசத்தை விட்டு அதைவிடக் கொடுமையான மற்ருெரு பஞ்சப் பிரதேசத்திற்குக் குடிபெயர்ந்து செல்லுவார்கள். பட்டினிப் பட்டாளங்கள் ஏதோ நம்பிக்கையுடன் ஒரே சாலையில் எதிர் எதிர் திசையில் பிரயாணம் செய்வது பஞ்சத்தின் கோரமான அலைக்கழிவுகளில் ஒன்று.

கோவில்பட்டிப் பிராந்தியத்திலிருந்து பல ஏழைகள் 'கூடை தலைமேலே குடிவாழ்க்கை கானகத்தில்' என்று குடும்பத்துடன் வடக்கு நோக்கி நடந்தனர்; வடக்கே இருந்து அதிசயம்போல அதே கோவில்பட்டியை நோக்கிப் புறப்பட்டுச் சென்றனர், ஆந்திர தேசத்து ஏழைகள் இருவர். அந்த இருவர்தான் நரசம்மாவும், அவளுடைய ஏக புத்திரியும் சுயரார்ஜிதச் சொத்துமான வெங்கட்டம்மாவும். நரசம்மாவின் கணவன் பட்டினியினுல் செத்தான் என்பது உண்மை; ஆனுல் காலராவினுல் செத்தான் என்று மானத்துக்கு அஞ்சி நரசம்மா பொய் சொன்னுள். பட்டினி கிடந்து செத்தான் என்று சொல்லுவது அவமானம் அல்லவா?

கணவன் செத்தான். குடும்பத்தின் தாங்கமுடியாத ஒரு சுமை குறைந்தது. மனிதப் பிண்டம் எவ்வளவு பெரிய சுமை என்பதை நிறுத்துக் கண்டறிய பஞ்சப் பிரதேசத்திற்குச் செல்லவேண்டும். மற்ற இடங்களில் நம் அபிப்பிராயத் தராசு பொய் சொல்லிவிடும். நெடு மூச்சுவிட்டாள்

நரசம்மா. அவள் வாழ்க்கையில் பாதி விமோசனம் பிறந்தது. உழைத்துச் சம்பாதிக்கும் தைரியம் கொண்ட தன் கணவனை மணந்தபோது; முழு விமோசனமும் பிறந்தது அவன் செத்தபோதுதான். பட்டினியும் நோயும் வாட்டி வதைக்கும் கணவனை, பட்டினி கிடக்கும் மனைவியும் மகளும், கண்ணுரப் பார்த்துக் கொண்டு எத்தனை நாட்களைத்தான் தள்ள முடியும்? பரஸ்பரம் எதுவும் செய்து சமாளித்துக்கொள்ள முடியாத நரசம்மாவின் குடும்பத்துக்கு, அது எவ்வளவோ பெரிய சுமையாக இருந்தது. பிறருக்குத் தெரியாமல் தனியே பட்டினி கிடந்தால் வேதனையாகத்தான் இருக்கும். பரஸ்பரம் தெரியும்படியாகப் பலர் பட்டினி கிடந்தால் ஒவ்வொருவருக்கும் தாங்க முடியாதபடி அவமானமாக அல்லவா இருக்கிறது!

கடைசியில் அவன் ஒரு வழியாகச் செத்தான். நரசம்மா அழுதாள்; வெங்கட்டம்மா பரிதவித்தாள். விரைவில் இருவருக்கும் ஞானோதயம் பிறந்தது. பட்டினி கிடப்பவன் உயிரோடிருக்கும்போது அழுதால் அர்த்தம் உண்டு; செத்த பிறகு அழுவது கேலிக் கூத்தல்லவா? அழுகையை நிறுத்தினார்கள்; செத்தவனை அடக்கம் செய்தார்கள் நரசம்மா விதவைக்கோலம் பூண்டாள். அதாவது கழுத்தில் கிடந்த வெறும் மஞ்சள் கயிற்றை அறுத்துப் போட்டாள். அதில் இருந்த தங்கத் தாலி, கணவன் உயிரோடிருக்கும் போதே, அடகு வைக்கப்பட்டு, பிறகு விற்கப்பட்டு, அரிசி புளியாக மாறிவிட்டது. ஆகவே விதவைக் கோலம் பூண் பதில் யாதொரு சிரமமோ, பிரயத்தனமோ அவசியப் படவில்லை.

பரம்பரை பரம்பரையாக மானத்தோடு வாழ்ந்து வந்த குடும்பம்; ஆகவே, வீட்டு வாசலுக்கு அமீனா வந்து நிற்கும் வரையில் காலம் கடத்தாமல், வீட்டைக் கடன்காரர்களுக்கு விட்டு விட்டார்கள். கூலி வேலை செய்து பிழைப்பதற்குக் கூட இடமில்லாதுபோன ஊரைவிட்டு, நாற்பத்தைந்து வயது ஸ்திரீயும், பதினேழு வயதுக் கன்னியும் வெளி

யேறினர்கள்! அவர்கள் புறப்பட்ட கதையும், அதிசயம் போல சென்னைக்கு வந்து சேர்ந்த கதையும் பெரிய பாரதம்.

அவர்கள் வந்த சமயத்தில் சென்னையில் ஸ்திரீகள் இரண்டு வகையான வாழ்க்கையைத்தான் கௌரவமாக நடத்த முடியும்போல இருந்தது. ஒன்று சீமாட்டியாக இருக்கலாம்; அல்லது கக்கூஸ் சுத்தம் செய்யும் குப்பைக் காரியாக இருக்கலாம். இந்த அபலைகளுக்கு இந்த இரண்டும் ஒத்துவரவில்லை. அவர்கள் சென்னைக்கு வந்த புதிதில் அவர்கள் செவிக்கு எட்டிய தகவல் கக்கூஸ் சுத்தம் செய்யும் வேலைக்கு ஆட்கள் தேவை என்பதுதான். ஏனென்றால் அப்போது தோட்டிகளின் வேலை நிறுத்தம் நடந்து வந்தது. வேலைக்கு வராத தோட்டிகளுக்குப் பிரதியாக ஆட்கள் தேவை இருந்தது. ஆனால் தாயும் மகளும் இந்த வேலை செய்ய இஷ்டப்படவில்லை. பிறந்த ஜாதி, வாழ்ந்த அந்தஸ்து எல்லாம் நினைக்கு வந்துவிட்டன.

சீமாட்டியாகவோ குப்பைக்காரியாகவோ இல்லாமல் நடுத்தரப் பிழைப்புப் பிழைக்க இருவருக்கும் வசதி கிடைக்கவில்லை. ஊர் ஊராக அலைந்தது போலவே, தெருத் தெருவாக அலைந்தார்கள். ஜீவனும்சத்துக்கு ஒரு தொழிலும் கிடைக்கவில்லை. யாரிடத்திலும் போய்ப் பேசுவதற்குக் கூட இயலாது போய்விட்டது, இந்த ஆந்திரப் பெண் களுக்கு. சென்னைபட்டணம் எங்களுக்குத்தான் என்று தெலுங்கர்கள் தம் மகாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றி விட்டால், சென்னை வாசிகளுக்குத் தெலுங்கு புரிந்துவிட வேண்டுமென்று கட்டாயம் இல்லையே! அறியாத ஊர், அறியாத பாஷை, இன்னும் அறியாத பல விஷயங்கள்—இந்த லட்சணத்தில் காட்சியளிக்கும் சென்னையில் ஏதோ இரண்டொரு தினங்கள் இருந்தார்கள் தாயும் மகளும்.

வெங்கட்டம்மாவின் தண்ணீர் கண்டறியாத புடவை புழுங்கி நாறியது. படுக்கை, போர்வை, புடவை இத்தனையுமாக இருந்து உதவிய அந்தக் கந்தல் துணியை இடுப்பில் சுற்றிக் கொள்வது முள் மேலியை எடுத்துச் சுற்றிக் கொள்ளுவதுபோல இருந்தது. அழுக்கும் சீலைப் பேனும்

நிறைந்த அந்தப் புடவை வெங்கட்டம்மாவின் உயிரோடு போட்டி போட்டுக் கொண்டு ஒவ்வொரு நாளும் அந்திம காலத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. பதினேழு வயதுப் பெண் இந்தக் கந்தத் துணியோடு தெருவழியே நடமாடினாள். மற்றவர்களுடைய வறுமையின் அஸ்திவாரத்தில் சுகபோகம் துய்க்கும் இந்த உலகத்தில், ஒரு பெண்ணின் கந்தல் துணியைப் பார்த்து இரக்கப்படுகிறவர்கள் அபூர்வம். கந்தலின் வழியாக வெங்கட்டம்மாவின் சரீரக்கட்டைத் தான் கடைக்கண் போட்டு எட்டிப் பார்த்தது மனித சமூகம். நரசம்மா பார்த்தாள். தான் 'கிழவி'யானதால் எப்படியும் அலையலாம். தான் கந்தல் துணியைக் கட்டிக் கொண்டாலும், ஊரார் தன்னைக் கூர்ந்து பார்க்கமாட்டார்கள் என்ற நினைப்புடன் தன்னுடைய புடவையை வெங்கட்டம்மாவுக்குக் கொடுத்துவிட்டு அவளுடைய கந்தலைத் தான் வாங்கிச் சுற்றிக்கொண்டாள். இந்த மன ஆறுதலுடன் அன்றையப் பொழுது அஸ்தமித்தது. மறுநாள் சென்னையை விட்டுப் புறப்படச் சித்தமாகிவிட்டனர்.

மறுநாள் பொழுது விடிந்ததும் வாழ்க்கையிலேயே முதல்முதலாகப் பிச்சை எடுத்துச் சாப்பிட்டதும், சந்தர்ப்ப வசமாக எழுப்பூர் ரயில்வே ஸ்டேஷனை சாயங்காலத்துக்குள்ளாகக் கண்டுபிடித்ததும், அசாதாரணமான துணிச்சலுடன் டிக்கட் வாங்காமல் ரயில் ஏறியதும் முதல்நாள் அவர்கள் படுக்கும்போது கற்பனை பண்ணிப் பார்க்காத காரியங்கள். டிக்கட் பரிசோதகர் வந்து எட்டிப் பார்க்காமல் இருந்தவரையில், அதாவது விருதுநகர் ஸ்டேஷன் வரையில், நரசம்மாவும் மகளும் மனக் கலவரத்துடனுவது பிரயாணம் செய்யமுடிந்தது. விருதுநகரில் கலவரம் ஒய்ந்தது. டிக்கட் பரிசோதகர் வந்து இருவரையும் கீழே இறக்கிவிட்டார். மற்றப்படி அவர் பேசிய பேச்சுக்கள்—அவை தெலுங்கு நாட்டுக்காரிகளான இருவருக்கும் புரியவில்லை. அம்மட்டிற்கு க்ஷேமமாகப் போய்விட்டது.

விருதுநகரில் வேலை கிடைக்கா விட்டாலும் பிச்சை கிடைத்தது. ஆனுல் பிச்சை எடுத்துப் பிழைக்கவேண்டும்

என்று இவர்கள் புறப்படவில்லை. வேலை தேடிப் புறப் பட்டவர்கள் அல்லவா? ஆகவே இன்னும் தெற்கே நோக்கிப் புறப்பட்டனர். தென்கோடியில் ஏதோ குபேரபட்டணம் இருப்பதாக அவர்களுடைய நினைப்பு. கோவில்பட்டிப் பிராந்தியத்தில் பஞ்சநிலை என்ற செய்தியை அரை குறை யாகத் தெரிந்து கொள்ளக்கூட அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. பத்திரிகை படிப்பவர்களுக்குக் கூட பாலஸ்தீன விவகாரம் தெரியுமே அல்லாமல், தாய் நாட்டில் பஞ்சம் என்ற விவரம் தெரியாதபோது, படிப்பு வாசனையற் றவர்களுக்கு எப்படித்தெரியும்?

சாலையின் வழியாக நடையைக் கட்டினார்கள். எதிரே நடந்துவரக் கூடிய மற்றொரு பட்டாளத்தையும் சந்தித் தார்கள். இந்த இரண்டு கோஷ்டியினருடைய பிரயாண லட்சியம் என்ன வென்று, இரண்டு கோஷ்டியினருக்குமே தெரியாது. பரஸ்பரம் ஒருவரோடு ஒருவர்பேசிக் கொள்ள வில்லை. வடக்கு நோக்கி நடப்பவர்கள் வடக்கே போனார்கள்; தெற்குநோக்கி நடப்பவர்கள் தெற்கே போனார்கள்.

சாத்தூர்......

நரசம்மாவும் வெங்கட்டம்மாவும் இந்த ஊருக்குவரும் போது பிற்பகல் இரண்டு மணி. வெயில் முதுகைச் சுட்டது. ஊரைச் சுற்றிலும் பயிர் பச்சையற்ற கரிசல் நிலத்தில் அனல் அலை அடித்துக் கொண்டிருந்தது. சப்பாத்தியும், பனைமரங்களும்கூட வாடித் துவளும்படியாக நீர்ச்சாரம் அற்றுப்போன கரிசல் பூமியில் கால் ஊன்றி நடப்பது நரக வேதனையாக இருந்தது. வயிற்றிலோ அதைவிட வெப்பம்; தீயாகச் சுட்டது பசி. நெஞ்சோ, என்றோ எரிந்து சாம்பலாகி விட்டது.

விருதுநகரும், சென்னையும் அவர்கள் பயந்து ஒதுக்கி விட்டுப் புறப்பட்ட அவர்களுடைய சொந்த ஊரும் சொர்க் கங்களாக மாறியது, அவர்கள் சாத்தூரைப் பார்த்த பிறகு தான். சாத்தூரில் பிச்சை போடுவார் இல்லை, குடிப்பதற் குத் தண்ணீர் எங்கே கிடைக்கும் என்றுகூடத் தெரியவில்லை. தெருவிலே கிடந்த புழு அரித்த ஒரு சொத்தை வெள்ளரிக்

காயை நரசம்மா கையில் எடுத்தாள்; அரை குறையாகக் கடிக்கப்பட்டிருந்த அந்த வெள்ளரிக்காயில் ஒட்டிய புழுதியை ஊதினாள். தின்போமா என்ற நினைப்பு கட்டுப் பாட்டை மீறிவிட்டது. ஆனால், வெங்கட்டம்மாவின் கண் முன்பாக அதைத் தின்ன நரசம்மாவுக்கு வெட்கமாக இருந்தது. ஆகவே எடுத்த வெள்ளரிக்காயைத் தூர எறிந்துவிட நினைத்தாள். அப்படியானால், 'அதை ஏன் எடுத்தோம் என்ற காரணத்தைச் சொல்ல வேண்டுமே!' என்று தோனறியது நரசம்மாவுக்கு. ஆகவே "இது என்ன காய் என்று தெரியவில்லையே!" என்று வெங்கட் டம்மாவிடம் கேட்டாள். வெங்கட்டம்மாவுக்குக் கோபம் வந்துவிட்டது. 'வயிற்றுப் பசி பிடுங்கித் தின்னும்போது, அம்மா விளையாடுகிறாளே' என்று நினைத்தாள் அந்த அப்பாவிப் பெண்.

"சீ, சும்மா இரு" என்று அம்மாமீது எரிந்து விழுந் தாள்.

எச்சில் வெள்ளரிக்காயைத் தின்பதைவிட வெங்கட் டம்மாவின் சுடு சொற்களைக் கேட்க மிகவும் அவமானமாக இருந்தது. தன்னுடைய அவமானத்தை மறைக்க ஒரு காரணத்தைச் சிருஷ்டித்துச் சொல்லும்போது, அதை உண்மை என்று உலகம் ஏற்றுக்கொண்டுவிட்டால் நிம்மதி யாகப் போய்விடும்; அந்தக் காரணத்தைப் பொய் என்று சொன்னாலும், அல்லது அதைக் காது கொடுத்துக் கேட்கா விட்டாலும் அவமானம்தான் கண்ட பலனாக இருக்கும்.

நரசம்மாவுக்கு மிகவும் வெட்கமாக இருந்தது; மகள் மீது கோபமும் வந்தது; பசிக் கொடுமையால் உலகத்தின் மீதேற்படும் கசப்பு முழுவதும் வெங்கட்டம்மாவின் மீது பாய்ந்தது. யாரையாவது ஒருவரை வெறுத்துச் சபிப்பது அந்த நிலையில் ஒரு பெரிய ஆறுதலாக இருந்தது. தான் அனுபவிக்கும் கொடுமைக்காகப் பழி வாங்க, நரசம்மாவுக் குக் கிடைத்த ஜீவன், பாவம், அவள் மகளேதான். மகளைக் கண்டபடி திட்டினாள். மகள் பிறந்த பிறகுதான் வீட்டில் துரதிர்ஷ்டமும், தரித்திரமும் தாண்டவமாடியதாகவும்,

இப்போது இப்படி அலைக்கழிய நேரிட்டதாகவும் வசை கூறினாள். கடைசியில் அழுதாள். கையில் இருந்த வெள்ளரிக்காயைப் பார்த்ததும் அவளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. அதை அப்படியே தெருவில் வீசி எறிந்தாள். இருவரும் அந்த இடத்தை விட்டுப் புறப் பட்டனர். ஊருக்குத் தென்புறம் இருக்கும் ஆற்றங்கரையில் ஒரு வண்டி நின்றது. அதன் கீழாக நிழலுக்கு ஒதுங்கினர்.

ஆற்றிலே தண்ணீர் இல்லை. சில இடங்களில் மணலில் ஆழமாகக் குழி தோண்டி அதிலிருந்து ஊறும் தண்ணீரை ஹோட்டலில் வேலை செய்யும் பையன்கள் வாளியில் மொண்டு கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் ஓர் ஒற்றை மாட்டு வண்டி இருந்தது. அதிலுள்ள ஒரு பீப்பாயில், வாளியில் மொண்ட தண்ணீரை ஊற்றி நிரப்பிக் கொண்டிருந்தார்கள். ஒரே ஓட்டமாக ஓடி அந்தப் பையன் களிடம் கேட்டு, ஒரு வாளியில் தண்ணீர் வாங்கி இருவரும் குடித்தார்கள்.

பசியினால் காய்ந்துபோன வயிற்றில் தண்ணீர் பட்டதும், வயிறு தகித்தது; 'சுள்' என்று நோவெடுத்தது. வெங்கட்டம்மா இடுப்பில் இரண்டு கைகளையும் வைத்து அமுக்கிக்கொண்டு நெளித்தாள். 'அம்மா' என்று இரண்டொரு தடவை முனகினாள். அப்படியே சுடுமணலில் உட்கார்ந்து விட்டாள்.

நரசம்மா பயந்து போய்விட்டாள். மகளை ஆதரவோடு அணைத்துப் பிடித்துக்கொண்டு 'என்ன, என்ன செய்கிறது, வெங்கட்டம்மா?' என்று தெலுங்கில் கேட்டாள். ஹோட்டல் பையனுக்கு இந்தத் தெலுங்கு வார்த்தைகள் அரை குறையாகப் புரிந்தன. ஆகவே, அவர்களில் ஒருவன் தெலுங்கிலேயே, அவர்களுக்கு எந்த ஊர், என்ன சமாச்சாரம் என்று விசாரித்தான். ஆனால் இந்தத் தெலுங்கும் ஆந்திர வாசிகளுக்கு அரை குறையாகத்தான் புரிந்தது. நரசம்மா வெட்கம் இல்லாமல் 'பசி தாங்காமல் இவள் துடிக்கிறாள்' என்று சொல்லிவிட்டாள்.

பையன்கள் பார்த்தார்கள். தாயாருக்குப் பசி என்றா லும் பேசாமல் போய்விடலாம்; பதினேழு வயதுக் கன்னிப் பெண்ணுக்குப் பசி என்றால், அதைக் கேட்டுவிட்டுப் பேசாமல் போக அவர்களுக்கு மனம் வரவில்லை. அடுத்த தடவை தண்ணீர் எடுக்க வரும்போது சாப்பாடு தருவதாக எல்லாப் பையன்களும் ஏகோபித்துச் சொன்னார்கள்.

நரசம்மாவுக்கு உயிர் வந்தது; கைத் தாங்கலாக மகளை அழைத்துக்கொண்டு அந்த வண்டியின் நிழலுக்குப் பழைய படியும் வந்தாள். மகள் பேசாமல் மணலில் படுத்து விட்டாள்.

ஹோட்டல்காரப் பையன்கள் — உண்மையில் நல்ல வாலிபம் வந்த இளைஞர்கள்—விறு விறு என்று வண்டியை ஓட்டிக்கொண்டு போனார்கள்.

* * *

பிற்பகல் மூன்று மணிக்கு ஹோட்டல் பையன்கள் கொடுத்த பழைய இட்டிலிகள் ஐந்தாறையும், இரண்டொரு பஜ்ஜிகளையும் சாப்பிட்டார்கள். ஆனால் சூரியாஸ்த மனத்தின்போது பழையபடியும் பசி எடுத்தது. இனி யார் இந்த மாதிரி இருக்குமிடம் தேடிப் பசிக்கு அன்னம் கொண்டு வருவார்கள்? தவிரவும் இரவில் தங்குவதற்கும் இடம் வேண்டும். இந்தக் கவலைகள் வந்து பற்றின. வெங்கட் டம்மா பழையபடியும் மணலில் படுத்துவிட்டாள். நரசம்மா உட்கார்ந்து கொண்டிருந்தாள். யாதொரு கவலையும் இல்லாமல் மகள் படுத்துவிட்டதைக் கண்டு அவளுக்குக் கோபம் வந்தது. ஆனாலும் ஒன்றும் சொல்லவில்லை. அருமை பெருமையாக வளர்த்த தன் ஒற்றைக்கொரு மகளை அன்று அனுவசியமாகக் கடிந்து கோபித்துக்கொண்டதை நினைத்து மிகவும் கஷ்டப்பட்டாள். அவளுடைய மனம் என்ன என்னவோ நினைத்துச் சஞ்சலப்பட்டது. இரண்டு கைகளாலும் உழைத்து ஜீவித்தது போய் இப்போது பிச்சை எடுத்தும் சாப்பிட்டாய் விட்டது. ஏனென்று கேட்பாரில் லாமல், ஊர் மந்தையில் மணலில் வந்து அனாதைகளாகக் கிடக்கிறார்கள். கணவன் பட்டினி கிடந்து செத்தான்

என்று சொல்ல நாணி, காலராவினுல் செத்தான் என்று பொய் சொல்லி மானத்தைப் பேணிய நரசம்மா, நடுத் தெருவில் கையை நீட்டி யாசகம் வாங்கி விட்டாள். பட்டணத்திலாவது தோட்டி வேலை கிடைக்கும் என்று சொன்னுர்கள். சாத்தூரில் அந்த வேலை கிடைப்ப தாகப் பிரஸ்தாபம் கூடக் கிடையாது. வயிற்றுப் பசி அதிகமாக அதிகமாக, 'பட்டணத்தில் தோட்டி வேலை யாவது செய்தோமா? அனுவசியமாக இவ்வளவு தூரம் வந்து விட்டோமே!' என்று தோன்றியது நரசம்மாவுக்கு. இந்த நினைப்பைத் தொடர்ந்து கண்ணீரும் வந்தது. கண்ணீர் பொங்கும் விழிகளால் மகளை ஏறிட்டுப் பார்த் தாள். வெங்கட்டம்மா நிம்மதியாக மணலில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தாள். அலைந்து அலைந்து அலுத்துப் போன சரீரம் தன்னை மறந்து ஓய்வெடுத்தது. வாயி லிருந்து எச்சில் ஒழுகி மணலை நனைத்தது. அவ்வளவு தன்னை மறந்த தூக்கம்.

மகள் தூங்குவதை நரசம்மா பார்த்தாள். அவ்வளவு தான், அரவமில்லாமல் எழுந்தாள். அவளைக் கொலை செய் யப் போவதாஞல் எவ்வளவு நிசப்தமும் ஜாக்கிரதையும் அவசியமோ, அவ்வளவு நிசப்தத்துடனும் ஜாக்கிரதையுட னும் எழுந்து சுற்றுமுற்றும் பார்த்தாள். மனிதப் பூண்டே தென்படவில்லை. அந்தி மயங்கி இருட்டத் தொடங்கிவிட்டது. தூரத்தே ஊருக்குள் ஏற்படும் சந்தடி தான் கேட்டதே ஒழிய, பக்கத்தில் யாதொரு சப்தமும் நட மாட்டமும் இல்லை. கலைந்து விலகிக் கிடந்த வெங்கட்டம் மாவின் புடவையைக்கூட எடுத்துச் சரியாகப் போட நரசம்மாவுக்கு மனம் துணியவில்லை; அப்படிச் செய்தால் வெங்கட்டமா எழுந்துவிடலாம் என்ற பயம். ஆகவே ஒன்றும் செய்யாமல் பொத்திப் பொத்தி நடந்து ஆற்றங் கரையை விட்டு ஊருக்குள் பிரவேசித்தாள். அக்கம் பக்கம் பார்க்காமல், யாரோ அறிந்தவர்களின் வீட்டை நோக்கி அவசர வேலையாகச் செல்லுவதைப் போல, அவ்வளவு வேகமாகச் சென்ருள். பழையபடியும் அந்தச் சொத்தை

வெள்ளரிக்காய் கிடந்த இடத்துக்கே வந்து சேர்ந்தாள். வெள்ளரிக்காய் அங்குதான் கிடந்தது. ஆனால் இப்போது ஒரு வித்தியாசம் என்னவென்றால், யாரோ ஒருவரின் காலால் மிதிபட்டு, ஓர் ஓரத்தில் நசுங்கிப் போயிருந்தது. அதை எடுத்தாள். பக்கத்தில் யாரும் நிற்பார்களோ என்று வெட்கப்படவில்லை. அவள் இப்போது வெட்கப் படுவது வெங்கட்டம்மாவின் முன்னிலையில்தானே ஒழிய, உலகத்தின் முன்னிலையில் அல்ல; மனித லக்ஷணமே தன்னுடைய மகளின் உருவத்தில்தான் நரசம்மாவுக்குச் காட்சியளித்தது.

வெள்ளரிக்காயை ஊதினாள்; கடைசியில் தின்றேவிட்டாள். ஒரு மட்டும் அவளுக்கு நிம்மதி பிறந்தது. ஏதோ இனி யுகக் கணக்கில் பசியில்லாமல் இருக்கலாம் போல அவளுக்குத் தோன்றியது. சந்தோஷத்துடன் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டாள்.

வாழ்க்கையின் 'எதார்த்த நிலை'யை ஏறக்குறைய எட்டிப் பிடித்தாய் விட்டது. பழைய கற்பனைகள், பழைய மயக்கங்கள், பழைய திருப்திகள், பழைய மான அவமானங்கள் எல்லாம் நொறுங்கிச் சிதறிவிட்டன. ஆனால் பழைய கட்டுகளை அறுத்தாலும், புது உலகத்தில் அடி எடுத்து வைக்க நரசம்மாவுக்கு இன்றும் சக்தி வரவில்லை. நிரந்தரமாகத் தெருப் பொறுக்கியோ, எச்சிலையை வழித்தோ, பிச்சை எடுத்தோ சாப்பிடலாம் என்ற தீர்மானத்துக்கு அவள் வந்துவிட முடியவில்லை. இரண்டும் கெட்டு, திரிசங்கு நிலையில் தவித்த அவளுக்கு, தன்னை வருத்தி வாட்டிய மான அவமானத்தைக் கொன்று, தனக்கென்று சொந்தமாக ஒரு மான அவமானத்தை, ஒரு மரபை, ஓர் ஒழுங்கை ஏற்படுத்திக்கொள்ள ஆற்றல் பிறக்கவில்லை. அந்த நிலையைப் பெற ஏதேனும் ஒரு பற்றுக் கோடு, ஒரு கொழு கொழும்பு, ஓர் ஆதரவு கிடைக்காதா என்று அவள் உள்ளம் மறுகியது. ஆனால் தன் உள்ளம் ஏன் மறுகுகிறது என்ற ரகசியம் நரசம்மாவுக்குத் தெரியவில்லை. பேசாமல் ஆற்றங்கரையை நோக்கி நடந்து வந்துகொண்டிருந்தாள்.

அங்கே இருந்த ஒரு பெரிய ஹோட்டலைக் கடந்து சில அடி தூரம் வந்திருப்பாள். அவளைத் தொடர்ந்து ஒரு இளைஞன் வந்தான். மிகவும் வேகமாக வந்தான். பின்னும் இரண்டு கஜ தூரம்கூட நரசம்மா போயிருக்கமாட்டாள்; அதற்குள்ளாக அவளை முந்திவிட்டான் இளைஞன். இரவு நேரமானதால் விளக்கு வெளிச்சம் இருந்தும், அந்த இளைஞனை யார் என்று அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. 'மத்தியானம் பலகாரம் கொண்டுவந்து கொடுத்தது நான்தான்' என்று தெரிவித்துவிட்டு, "இராத்திரி என்ன சாப்பிடப் போகிறீர்கள், எங்கே படுத்துத் தூங்குவீர்கள்?" என்றும் அவன் கேட்டான். அது நரசம்மாவுக்குத் தான் தெரியுமா?

தெருவிலே சினிமாவுக்குப் போகிறவர்கள், கடைகளுக்குச் சாமான் வாங்கப் போகிறவர்கள், நடுநடுவே பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் பஸ்கள், அத்துடன் சைக்கிள் மணி, பத்திரிகை விற்பவனின் குரல், ஹோட்டல்களில் போட்டி போட்டுக்கொண்டு அசுரத்தனமாகக் கத்தும் ரேடியோக்கள்—இந்த ஜன நெருக்கத்தினிடையில், இந்தச் சந்தடியினிடையில் இரண்டு மனிதக் குரல்கள் அந்தரங்கமாகப் பேரம் பேசிக்கொண்டிருந்தன.

பாதி தூரம் கடந்தாய்விட்டது. பிறகுதான் அவள் இணங்கினாள். மறுநாள் விடிந்ததும் நரசம்மாவின் கையில் பத்து ரூபாய் இருக்கும்; ஒரு பழைய புடவையும் அதிகப்படியாக இருக்கும்; இன்று இரவு ஜாகைக்கு ஓர் அறையும் கிடைக்கும்......வாலிபன் திரும்பிப் போய்விட்டான்.

வெங்கட்டம்மா அப்போது தூங்கிக்கொண்டுதான் இருந்தாள். வந்து நரசம்மா எழுப்பினாள். 'எழுந்திரு. அங்கே ஓரிடத்தில் சாப்பாடு போடுகிறார்கள்' என்று சொன்னாள். சிறிது நேரத்தில் வெங்கட்டம்மாவும் எழுந்தாள். சாப்பாடு வேண்டாம், இன்னும் கொஞ்சம் தூங்கினால் நல்லது என்றுதான் அப்போது அவளுக்குத் தோன்றியது. அடித்துப் போட்டது மாதிரி உடம்பு வலித்தது. ஆனாலும் தாயாருடன் 'சாப்பாட்டுக்கே' கிளம்பிவிட்டாள். இவர்கள் புறப்பட்ட இரண்டொரு நிமிஷங்களுக்

குள்ளாக அதே வாலிபன் வந்தான். அவனுக்கு இப்போதே வெங்கட்டம்மாவின் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போக ஆசை, ஆனாலும் தெரு வழியாக அப்படிப் போவது எப்படி என்ற பயம். அவன் முன்னும் பின்னும் தெரிந்தவனைப்போல நரசம்மாவிடம் பேசியதைக் கண்டு வெங்கட்டம்மாவுக்கு ஒரே வியப்பு; அதைவிடப் பெரிய வியப்பு, அவன் தன் கையால் ஏதோ ஒன்றை நரசம்மாவிடம் கொடுத்ததும், நரசம்மா பத்திரமாக வாங்கிக் கொண்டதும், ஒன்றும் புரியவில்லை. "என்னம்மா?" என்று கேட்டாள் வெங்கட்டம்மா.

"ஒன்றுமில்லை."

"என்ன ஒன்றுமில்லை? கையிலே என்னது?"

"ரூபாய்."

"ரூபாயா?"

"ஆமாம்."

புரியாத வெங்கட்டம்மாவுக்கு விஷயத்தை விளக்குவதற்கு அது இடமில்லை. பேசாமல் அவளை அழைத்துக் கொண்டு மட்டும் போனாள். வாலிபன் சுபாவமாகத் தெருவோடு செல்லுகிறவனைப்போல இவர்களுக்கு முன்பாக நடந்து சென்று கொண்டிருந்தான். இவர்களை அவன் எங்கோ அழைத்துக்கொண்டு போனான். ஒரே இருட்டாக இருந்த ஒரு சந்தின் வழியாகச் சென்று ஓர் இருட்டறையில் கொண்டுபோய் இருவரையும் உட்கார வைத்தான். இரவு பத்து மணிக்கு மேல், ஹோட்டல் அடைத்த பிறகு வருவதாக நரசம்மாவிடம் சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

கொஞ்சம் கொஞ்சமாக விஷயத்தை விளக்கினாள் நரசம்மா. பத்து ரூபாய், ஒரு பழைய புடவை—இந்தச் சம்பத்து சாமான்யத்தில் கிடைக்குமா? இதைச் சம்பாதிக்க உலகத்தில் ஒவ்வொருவர் படும் கஷ்டங்கள் எத்தனை? ஆனால் இவ்வளவு சுலபமாக இரண்டு வாலிபர்களிடம் ஒரு நாள் இரவுப் பொழுதுக்குள்ளாக இந்தப் பணத்தை வாங்கிவிட முடியும் என்றால் அது எப்படிப்பட்ட அதிர்ஷ்டம்? நரசம்மா தன் மகளிடம் ஒன்று சொன்னாள்!

வெங்கட்டம்மா அழுது அழுது தொண்டை கட்டி விட்டது. வெளியே எழுந்து ஓட முயன்ருள். ஆனல் தாய் ராக்ஷஸ பலத்தோடு கையைப் பற்றி வீட்டுக்குள் இழுத்துப் போட்டுக் கதவைத் தாளிட்டுவிட்டாள்.

"மானம் போகுதடி! அழாதே! யாரும் கேட்டால் நம் கதி என்ன? கூட்டம் கூடிவிட்டால் எப்படிப் பதில் சொல்லப் போகிருேம்? கிடைத்த பணத்தில் மண்ணைப் போட்டு விடாதே" என்று காதோடு காதாகச் சொன்னள். ஆனல் வெங்கட்டம்மா பழையபடியும் கதவைத் திறந்துகொண்டு ஓடவே முயற்சி செய்தாள்.

நரசம்மாவுக்குக் கோபம் வந்துவிட்டது. பத்ரகாளி போல எழுந்தாள். வெங்கட்டம்மாவைக் கொன்றுவிட வேண்டும் என்றே தீர்மானித்துவிட்டாள்.

"சண்டாளி! கைக்கெட்டியதை வாய்க்கெட்டாமல் செய்துவிடுவாய் போலிருக்கிறதே! உன்னைக் கொன்ருல் தான் எனக்கு மனசு ஆறும்" என்று குரல்வளையைப் பிடித்துவிட்டாள்.

வெங்கட்டம்மா அசுரத்தனமாகத் தாயின் கையைக் கிள்ளினள். கிள்ளியதில் ரத்தமும் வந்துவிட்டது. ஓங்கி அவள் முகத்தில் குத்தினள். தலையை இங்கும் அங்கும் ஆட்டி நரசம்மாவின் கைப்பிடியிலிருந்து தப்பிக்க முயன்ருள். அது முடியவில்லை. அடக்க முடியாத கோபத்துடன் தாயின் மூக்கில் ஓங்கிக் குத்தினள். அவளும் தன் கைப் பிடியை விட்டாள்; தொப்பென்று கீழே விழுந்தாள். அவள் மூக்கில் ரத்தம் ஒழுகியது. ஆனல் அது இருட்டில் இருவருக்குமே தெரியவில்லை. நரசம்மா ஒன்றும் பேசவில்லை. குப்புறப் படுத்துவிட்டாள். வெங்கட்டம்மா நூறு தடவை 'அம்மா அம்மா' என்று அழைத்துப் பார்த்தாள். பதில் இல்லை. ஆனல் நரசம்மா பெருமூச்சு விடுவது தெளிவாகக் கேட்டது. பிறகு, தாயாரை இப்படிக் கொடுமைப்படுத்தியதை நினைத்து அழுதாள் வெங்கட்டம்மா.

"அம்மா! பத்து ரூபாய்க்குக் குறையாமல் கிடைக்குமா?" என்று அழுதுகொண்டே கேட்டாள். படுத்துக் கிடந்த நரசம்மா எழுந்து மகளின் கழுத்தைக் கட்டிக்

கொண்டு அழுதாள்; இருவரும் அழுதார்கள். அழுகை ஒலி தெருவுக்குக் கேட்காதவாறு, அவ்வளவு ரகசியமாக அழுதார்கள்.

இரவு பத்து மணிக்கு மேல் வருவதாகச் சொன்னவன் பத்து மணிக்கு முன்பாகவே வந்து விட்டான். அவன் நரசம்மாவிடம் பேசிக்கொண்டபடியே தன் கூட்டாளியையும் அழைத்துக்கொண்டு வந்தான்.

திடீரென்று, ''பசியாக இருக்கிறது'' என்று சொன்னாள் வெங்கட்டம்மா. தாயாரும், ''ஆம், பசிக்கு ஏதாவது முதலில் வாங்கி வாருங்கள்'' என்றாள். ஒருவன் மனமில்லாமல் போனான். போய் சினிமாக் கொட்டகையை அடுத்திருந்த ஒரு கடையில் கொஞ்சம் பலகாரம் வாங்கிக் கொண்டு வந்தான்.

பலகாரத்தைத் தாயும் மகளும் சாப்பிட்டார்கள்; சாப்பிட்ட பிறகு தாகத்திற்குத் தண்ணீர் இல்லை. அந்த நேரத்திற்குப் பிறகு தண்ணீர் கிடைத்தாலும், தண்ணீர் கொண்டுவரப் பாத்திரத்திற்கு எங்கே போவது? அதனால் தண்ணீர் விவகாரத்தைக் கைவிட வேண்டியதாயிற்று.

ஜன்னல் இல்லாத ஒரே இருட்டறை. இருட்டுத்தான் அந்தரங்கச் சூழலை உண்டாக்கிக் கொடுத்தது.

தாயின் சம்மதம் பெற்று, தாயின் கண் முன்பாகவே பசியின் காரணமாக ஒரு கன்னிப் பெண் தன் கற்பை விற்கும் கோர நாடகம், அந்த இரவில், அந்தப் பரிதாபகரமான இரவில் நடந்தேறியது.

ஃ ஃ ஃ

சூரியோதயத்துக்கு முன்பே அறையைக் காலி செய்துவிட்டு, தாயும் மகளும் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்துவிட்டார்கள். அங்கே வந்து ஏதோ பலகாரத்தை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு இருவரும் படுத்தார்கள். நரசம்மா பத்து மணிக்கெல்லாம் எழுந்துவிட்டாள். வெங்கட்டம்மா பிற்பகல் இரண்டு மணிக்குத்தான் எழுந்தாள். தூங்கியதனால் உடம்புக்குக் கொஞ்சம் சுளுவாக இருந்தது. பழையபடியும் பலகாரம் வாங்கிச் சாப்பிடப் போனார்கள். அம்மா பத்து ரூபாய் நோட்டை எடுத்து அதைப் பழையபடியும்

மடியில் வைத்துவிட்டு, ஒரு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுத்து, கடையில் பலகாரம் வாங்கினுள்; இதைப் பார்த்தாள் வெங்கட்டம்மா. பத்து ரூபாய் நோட்டும் சில்லறையும்.........நேற்று இதே நேரத்தில் கையில் தம்பிடி இல்லாமல் பட்டினி கிடந்ததற்கும், இப் போது பத்து ரூபாயும் சில்லறையும் இருப்பதற்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்டதும், வெங்கட்டம்மாவி ஞல் நிலை கொள்ள முடியவில்லை. அம்மா கடையைவிட்டு அப்பால் நகர்ந்ததும், அம்மாவிடமிருந்து அவ்வளவு பணத் தையும் வாங்கினுள். வலது கையிலிருந்து இடது கையில் பணத்தைப் போட்டாள். இடது கையிலிந்து வலது கையில் போட்டாள். வியந்து வியந்து பார்த்தவண்ணம் பணத்தைக் கையில் போட்டுக் குலுக்கினுள். எவ்வளவு எளிதாக இவ்வளவு பெரிய தொகை கிடைத்துவிட்டது என்பதை நினைக்கும்போது அவளால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. உரக்கச் சிரித்தாள். விட்டு விட்டுப் பல முறை சிரித்துவிட்டாள். அந்தச் சிரிப்பு எதற்கு என்று அவளுக்கே புரியவில்லை. பாண்டியனிடம் சிவபிரான் வாங்கிய பொற் பிரம்படியைப்போல், அவள் சிரித்த சிரிப்பு எங்கெல்லாம் பிரதிபலிக்க இருந்ததோ அவளுக்கே தெரியாது. அவள் மனிதன் கட்டிய ஒழுக்கத்தை நோக் கிச் சிரித்தாள்; ஒழுக்கக் கேட்டை நோக்கிச் சிரித்தாள். நாகரிகத்தையும், அநாகரீகத்தையும் பார்த்துச் சிரித்தாள் பணக்காரர்களை, ஏழைகளை, ஆண்களை, பெண்களை, பஞ் சத்தை—இப்படி எத்தனையோ அடங்கிய உலகத்தையே நோக்கிச் சிரித்தாள். இது வெங்கட்டம்மாவுக்குத் தெரி யுமோ என்னவோ?

சிவன் சிரித்துத் திரிபுரத்தை எரித்தான்; இவள் சிரிப்பு என்ன செய்யப் போகிறதோ? அதை இப்போது யார்தான் அறிவார்கள்? அந்தக் காலத்துப் புத்திமான் களும்கூட ஏழை அழுத கண்ணீருக்குத்தான் வாளை உப மானமாகச் சொன்ஞர்களே ஒழிய, ஏழை சிரித்த சிரிப் பைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லையே!

# வெறும் நாய்

டாக்டர் வீட்டுக்கு வடக்கே ஒரு பெரிய தென்னந் தோப்பு இருக்கிறது. டாக்டர் வீட்டுக்குக் கிழக்கே ஒரு பெரிய வீடும், அப்புறம் பல பெரிய வீடுகளும் இருக்கின்றன. டாக்டர் வீட்டுக்குத் தெற்கேயும் வீடுகள்தான்; மேற்கில் அதாவது முன்புறத்தில் ஒரு பெரிய ரோடு.

டாக்டர் ஒரு பெரிய பணக்காரர்; தொழிலில் கெட்டிக் காரர்; பணத்தையும் கெட்டிக்காரத் தனத்தையும்விட அவருக்கு இருக்கும் செல்வாக்கு அதிகம். அவருக்கு ஏதா வது ஒன்று என்ருல் ஊரே திரண்டு வந்துவிடும். காரணம் என்னவென்ருல்.........

அவர் கொடுக்கும் உடல்நிலே—நற்சாக்ஷிப் பத்திரத்தை வைத்துத்தான் அந்த ஊரில் உள்ள பலரும் உத்தியோகத்தில் சேர்ந்திருக்கிருர்கள்; இன்று பெரிய உத்தியோகங்களே வகிக்கிருர்கள். உத்தியோக காலத்தில் நினைத்த நேரத்தில் லீவு வாங்கவும், அபாயகரமான உத்தியோகத்திலிருப்ப வர்கள் பென்ஷன் சகாப்தத்தைத் தாங்கள் இஷ்டப்பட்ட வருஷத்திற்கு முன்னுக்கு இழுத்துக் கொள்ளவும் அந்த டாக்டர் சர்டிபிகேட் கொடுத்தாக வேண்டும். ஆகவே உத்தியோக வட்டாரத்தில் டாக்டருக்கு எப்படிப்பட்ட மரியாதை இருக்கும் என்று சொல்லத் தேவை இல்லே.

பல பணக்காரர் வீடுகளின் அந்தரங்கங்கள் தொழில் முறையில் டாக்டருக்குத் தெரிந்திருந்தன. இதனுல் அந்த ரங்கம் அவருடைய மனத்தைவிட்டு வெளியே போகாமல் இருக்க, பல நாம ரூபங்களில் அவ்வப்போது சன்மானங் களும் செய்வார்கள் பணக்காரர்கள். தேவைக்கு அதிக

மான மரியாதையும் காட்டுவார்கள். உத்தியோகஸ்தர்களும், பணக்காரர்களும் ;மரியாதை காட்டக்கூடிய ஒரு மனிதனுக்கு, மற்ற ஜனங்களிடத்தில் தானாகவே மரியாதையும், செல்வாக்கும் ஏற்படாமல் வேறு என்ன செய்யும்?

இப்படிப்பட்ட பெரிய டாக்டருக்கு ஒரு பணக்காரர் ஓர் அருமையான நாயை இனாமாகக் கொடுத்திருந்தார். அது ஒரு ஜாதி நாய். என்னவோ ஒரு நல்ல ஊர் வர்க்கம். ரூபாய் ஆயிரம் கொடுத்தாலும் அப்படிப்பட்ட நாய் கிடைக்காதென்றும், கிடைத்தாலும் அப்படிப்பட்ட உத்தம குணம் உள்ளதாகக் கிடைக்காது என்றும் டாக்டர் தம் தரத்துக்கு ஒப்பான பெரிய மனிதர்களிடம் அடிக்கடி சொல்லிக்கொண்டே இருப்பார்.

இப்படிப்பட்ட உத்தம குணமுள்ள ஜாதி நாய் ஒரு நாள் திடீரென்று வாசல் திண்ணையில் நின்று குரைத்தது; குரைத்துக்கொண்டே முற்றத்தில் குதித்தது; குதித்ததை மறக்க வைத்துவிட்டது அதன் நாலுகால் பாய்ச்சல். காம்பவுண்டு வேலியில் நுழைந்து வீட்டிற்கு எதிரே உள்ள ரோட்டில் பிரவேசித்தது. இத்தனை ஆட்டபாட்டங்களுக்கும் மூல காரணமாக இருந்து ஆட்டி வைத்தது தெருவோடு போய்க் கொண்டிருந்த ஒரு நாய்தான். அது ஜாதி நாய் அன்று; கேவலம், வெறும் நாய்தான்.

ஜாதி நாயும் வெறும் நாயும் பல்லும் ஈறும் வெளியே தெரியும்படியாக வாயை வைத்துக்கொண்டு உறுமின; அப்பொழுது வாய்களைப் பார்க்கப் பயமாக இருந்தது. பிறகு 'விஸில்' கொடுத்துப் பாயச் சொன்னதுபோல, இரண்டும் 'டபக்'கென்று பாய்ந்தன. குரைக்கிற முழக்கம் ஊரைத் தூக்கிவிட்டது. டாக்டர் சாப்பிட்டுக் கொண்டிருந்ததால், தம்முடைய சொந்த நாய்தான் திக்கு விஜயார்த்தமாகப் போய் இப்படிக் குரைத்துக்கொண்டிருக்கிறது என்பதை அறிய முடியாமல் போய்விட்டது.

சில நிமிஷச் சண்டையிலேயே ஜாதி நாய்க்கு ஆறு இடங்களிலும், வெறும் நாய்க்கு நான்கு இடங்களிலும் பல்

பட்டுப் படுகாயமாகி விட்டது; ரத்தமும் ஒழுகத் தொடங்கியது. இரண்டு நாய்களுக்கும் மேற்கொண்டு தலா இரண்டு காயங்கள் ஏற்படக் கூடிய சந்தர்ப்பத்தில் டாக்டர் வந்துவிட்டார். அவருக்கு வந்த கோபத்துக்கு இக்கரை தான் உண்டே தவிர, அக்கரை கிடையாது. "அந்த அயோக்கியப் பயலை நான் எத்தனை தடவை எச்சரிக்கை பண்றது? ராஸ்கேல்......" என்று சொல்லிக்கொண்டே சுற்றும் முற்றும் தேடினார்; கல் அகப்படவில்லை.

இதனால் கோபம் பின்னும் அதிகமாகிவிட்டது.

அப்புறம், அவருடைய நாய் வாலை மடக்கிக்கொண்டு திரும்பி ஓடி வருவதையும், அதைத் துரத்திக்கொண்டு வெறும் நாய் ஓடி வருவதையும் பார்த்தார்.

"இனி அந்தப் பயலிடத்திலே சொல்லி ஆகப் போறது என்ன! இந்த நாயைச் சுட்டுப் பொசுக்கிடறேன்; அப்புறம் எவன் வந்து என்னைக் கேட்பான்னு பார்ப்போம்."

இப்படி டாக்டர் சொன்னது வாஸ்வதம்; ஆனால், அது முழுப் பொய். ஏனென்றால் அவரிடம் ரிவால்வாரோ, துப்பாக்கியோ, தீவட்டியோ கூடக் கிடையாது—சுடுவதற்கு. அத்துடன், கேவலம் ஒரு கல்கூடப் 'பளிச்'சென்று அகப்படவில்லை. கடைசியில், வாடாமல்லிகைச் செடிக்குத் தண்ணீர் விடும் இடத்தில், தண்ணீர் குழி பறிக்காமல் இருப்பதற்காக ஒரு சிறு சதுரக்கல் பதிக்கப்பட்டிருந்தது. அது இலை மறைவு, கல் மறைவாக டாக்டருக்குத் தென்பட்டது. கை சேருனாலும் பரவாயில்லை என்று கல்லை எடுத்தார். இத்தனை காரியங்களும் கண் மூடிக் கண் திறப்பதற்குள்ளாகவே நடந்துவிட்டன.

கல்லைக் கையிலெடுத்தார்; குறி பார்த்தார்; குறி சரியாக இருக்கிறது என்று நினைத்துக்கொண்டார்; "போ கழுதை" என்று ஆத்திரத்தோடு கூறிக்கொண்டு வெறும் நாயைப் பார்த்து எறிந்தார். அந்த வெறும் நாய் முட்டாள் தனமாக இயல்பான வேகத்தைவிட அதிக வேகத்தில் ஓடத் தொடங்கியது. தனக்கு ஏழு கஜ தூரத்துக்கப்பால்தான் கல் விழும்

என்று தெளிவாகத் தெரிந்திருந்தும், அனுவசியமாகத் 'தப்பிப் பிழைத்தது' வெறும் நாய்.

அது அங்கேயே நின்று, தன் உடம்பில் கல்லெறியையும் தாங்கிக்கொண்டு, அப்படியே செத்துப் போகாமல் ஓடி விட்டதைக் கண்டார் டாக்டர்.

அவருடைய கோபம் பின்னும் அதிகரித்தது. அதிகரிக்காமல் இருக்க முடியாது.

உடனே அதி வேகமாக வட புறத்திலுள்ள தென்னந் தோப்புக்குள் நுழைந்தார். டாக்டர் எந்த ஆசாமியைத் தேடிப் போனாரோ அந்த ஆசாமி குடிசையிலேயே இருந்தான்.

"ஏய் முனிசாமி, உன் நாயை இன்னிக்காவது கட்டிப் போடறயா, இல்லே அதைச் சுட்டுப் போடட்டுமா!" என்று ஒரு போடு போட்டார் டாக்டர்.

முனிசாமிக்குக் கிலி யடித்துவிட்டது. நாய் சுடப்படும் என்பதற்காக அல்ல; டாக்டரின் கோபத்துக்கு ஆளானதற்காகத்தான்.

முனிசாமி அஞ்சி ஒடுங்கி, "தெரியாம நடந்துட்டதுங்க. நாளைக்கு அந்த நாயைக் கொண்டுபோய் ஊரிலே என் மச்சான் ஊட்டிலே விட்டுட்டு வந்துடறேனுங்க...... இந்தவாட்டி மன்னுச்சுக்கணுங்க" என்று கும்பிட்டான்.

"மன்னிக்கவா? ஸ்டுபிட் பெலோ! உனக்கு எத்தனை தடவை நான் சொல்றதுடா?" என்று 'டா' போட்டுப் பேசினார்.

சரி, டாக்டருக்குக் கோபம் அதிகமாக இருக்கிறது என்று ஊகித்துக்கொண்ட முனிசாமி, "நாயை இப்பவே கட்டிப் போடறேனுங்க" என்று சொல்லிவிட்டுச் சும்மா இருக்காமல் "நாய் உங்களைக் கடிச்சிட்டதா?" என்று கேட்டுவிட்டான்.

டாக்டரின் கோபம் ஒரேயடியாக அதிகரித்தது. ஏனென்றால் நாய் அவரைக் கடிக்காதது ஒன்று; கடிக்காத

வரைக்கும் முனிசாமி தன்னை நிரபராதி என்று நினைத்தது ஒன்று; எல்லாவற்றையும்விட, அவன் தன்னைப் பார்த்து விசாரித்துக் கொண்டிருப்பது ஒன்று.

"இன்னிக்கே சுட்டுப் போடறேன். உனக்கும் புத்தி புகட்டுகிறேன்" என்று சொல்லிவிட்டு டாக்டர் திரும்பி விட்டார்.

முனிசாமி பின்னால் ஓடிவந்தான், "கோவிச்சுக்காதிங்க—கொவிச்சுக்காதிங்க" என்று கெஞ்சினான். பிறகு நாயைப் பிடித்துக் கட்ட டாக்டருக்கு முன்னாக ஓடினான். அவனுடைய கட்டு மஸ்தான வஜ்ஜிர தேகம் வேர்த்து, வெயிலில் பளபளத்தது. டாக்டருக்கும் வேர்த்துவிட்டது. மிகவும் அலுப்போடு தம் பங்களாவை நோக்கி வந்து கொண்டிருந்தார். நாயைத் தேடிக் கண்டுபிடிக்க முனிசாமி ரோட்டில் பிரவேசித்தான்.

2

"என்னுங்கோ, துட்டுக்காரங்க ஊட்டிலே கட்டிப் போடற மாதிரி நாயைக் கட்டிப் போட்டிருக்கீங்களே, அதுக்குச் சாப்பாடு போடறது எப்படியாம்? என்ன மச்சான்......?" என்று முனிசாமியின் மனைவி சிரித்துக் கொண்டே கேட்டாள்.

முனிசாமிக்கு ஞானோதயம் ஆகிவிட்டது. "ஆமா குட்டி, நீ சொல்றது உண்மைதான்" என்று ஒப்புக் கொண்டு விட்டான்.

பெண்டாட்டி விழுந்து விழுந்து சிரித்தாள்.

முனிசாமி நடந்த கதையை விடாமல் சொன்னான்; டாக்டர் "சுட்டுவிடுவேன்" என்று இரண்டு மூன்று முறைதான் சொன்னார்; ஆனால் முனிசாமியோ, அவர் ஆயிரம் தடவை சொன்னதுபோலச் சொன்னான்.

முனிசாமியின் மனைவியும் பயந்துவிட்டாள். இருந்தாலும், "டாக்டர், அவரு ஊட்டு நாயைக் கட்டிப் போட்

டிருந்தா, இது அதைக் கடிச்சிருக்குமா? அவரும் நாயைக் கட்டிப் போடல்லே; நாமளும் கட்டிப் போடலே. ரெண்டும் கடிச்சுக்கிச்சு; காயமும் ஆய்ப் போச்சு. நம்பளெ மட்டும் டாக்டரு எப்படிக் குத்தம் சொல்லலாம்?'' என்று கேட்டாள்.

“என்ன புள்ளே, ஒரே யடியா அளக்கிறே! அவங்க யாரு? நம்ப யாரு? இரண்டும் ஒண்ணு ஆயிடுமா? நாம்ப தான் நம்ப நாயைக் கட்டிப் போடணும், வெவரம் இல்லாமப் பேசறயே!'' என்று எகத்தாளமாகச் சிரித்துக் கொண்டே சொன்னுன் முனிசாமி.

“அப்படின்னு, சாப்பாடு போட்டு வளருங்கோ'' என்று சொல்லிவிட்டு அப்பால் போய்விட்டாள் பெண்டாட்டி.

முனிசாமிக்குப் பெரிய புதிராகிவிட்டது. அதனுல் கூட்டாலோசனை செய்து புதிரை விடுவிப்பதற்காகக் குடிசைக்குள் நுழையும் மனைவியை மர நிழலுக்குப் பழைய படியும் அழைத்தான்.

“என்னுங்கோ?''

“அப்படின்னு, நாயை அவுத்துவிட்டிற வேண்டியது தான். என்ன சொல்றே?''

“அப்புறம் டாக்டர்?''

“அப்படின்னு நீ என்னதான் செய்யச் சொல்றே புள்ளே?''

“ஒண்ணும் செய்யச் சொல்லல்லே.''

பெண்டாட்டி சிரித்தாள்.

முனிசாமிக்குக் கோபம் வந்துவிட்டது. இருந்தாலும் புதுப் பெண்டாட்டியை வெளிப்படையாகக் கோபித்துக் கொள்ள இஷ்டம் இல்லை. அதனுல் தலையைக் குனிந்து கொண்டு யோசித்தான். பிறகு தூங்கி எழுந்தவனைப் போலத் தலையைத் தூக்கி ஏறிட்டுப் பார்த்து, “வெத்திலை பாக்கை எடுத்து வா, போ'' என்று சொன்னுன்.

பெண்டாட்டி வெற்றிலை பாக்கைக் கொண்டு வரும் போது, முனிசாமியின் முகத்தில் சந்தோஷக் குறி தென் பட்டது.

"யோசனை பண்ணிப்புட்டேன், புள்ளே. நம்ப மோட்டுக் குப்பம் கபாலி போன வருஷம் 'வளர்க்கிறதுக்கு நாய்க்குட்டி கிடைக்குமா'ன்னு கேட்டுகினு இருந்தான். அவனுக்குக் குடுத்துடலாம்னு யோசனை பண்ணிப்புட் டேன்."

"அவரு குட்டிதானே கேட்டாரு? இம்மாத்தப் பெரிசு நாயா கேட்டாரு?"

"அதுக்கென்ன புள்ளே? இது குட்டி போடாதா?"

குட்டி போட்டாலும் போடாவிட்டாலும் நாயை வாங்கிக்கொள்ள யாதொரு மறுப்பும் சொல்லவில்லை மோட்டுக்குப்பம் கபாலி. அவன் அதே தெருவில் அரை மைல் தூரம் வடக்கே தள்ளி முனிசாமியைப் போலவே ஒரு குடிசையில் வசித்து வந்தான். நாயைக் கட்டிப் போட்டு வளர்க்கவேண்டும் என்று சொல்ல வாயெடுத்த முனிசாமி, அந்தப் புத்திமதியைச் சொல்லாமல் உள்ளே அமுக்கிக்கொண்டான். கட்டிப் போட்டு, சாப்பாடு போட்டு, வளர்க்கத் தன்னால் இயலாது என்று அவன் சொல்லிவிடுவானோ என்று முனிசாமிக்குப் பயம்.

டாக்டர் 'சுட்டுப் போடுவேன்' என்று சொன்னதற்கு மறுநாள்தான் இந்த நாய்...தானம் நடந்தேறியது.

அதிலிருந்து டாக்டர் சம்பந்தப்பட்ட மட்டில் முனி சாமி புதுமாதிரியாக நடந்துகொள்ள ஆரம்பித்தான். அதற்கு முன்னால் டாக்டரைப் பற்றி அவன் சிந்தித்தது கூடக் கிடையாது. டாக்டர் என்றென்றும் தன்மீது கோபத்துடன் தான் இருப்பார் என்றும் அவருடைய கோபத்தைத் தணித்து அவரிடத்தில் நல்ல பிள்ளை என்று பெயர் வாங்குவதில்தான் தன் பிழைப்பே அடங்கியிருக் கிறது என்றும் நினைத்துவிட்டான்.

டாக்டர் வீட்டு வாசலுக்கு நேரே போகும்போது, அங்காளம்மன் கோவிலுக்கு நேரே போவது போல அத்தனை பயபக்தியுடன் போவான். அவனை இரண்டொரு முறை பார்த்த டாக்டர், அவன் எதிர்பார்த்தபடி அபாயகரமாக எதுவும் செய்யவில்லை; அதனால் டாக்டரிடத்தில் அவனுக்கு ஒரு மதிப்பு ஏற்பட்டுவிட்டது. ஒருநாள் டாக்டரின் கண்களும் அவனுடைய கண்களும் சந்தித்துவிட்டன. டாக்டர் எதையோ நினைத்துக்கொண்டு உற்றுப் பார்த்தார். உடனே முனிசாமி 'சமயம், சமயம்' என்று பக்கத்தில் ஓடி, "நாயை விட்டுக் கடாசிட்டேங்க. மோட்டுக் குப்பம் கபாலிக்குக் கொடுத்துட்டேன்" என்று சொன்னான்.

டாக்டர் ஒன்றும் சொல்லாமல், அவன் சொன்னதையும் காதில் வாங்கிக்கொள்ளாமல், உள்ளே போய்விட்டார்.

"ஐயாவுக்கு இன்னும் கோபம் தணியல்லே" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு வந்தான் முனிசாமி.

ஒரு நாள் அவன் டாக்டர் வீட்டுக்கு முன்பாக நடந்து வந்து கொண்டிருந்தான். தன்னுடைய பழைய நாய் அங்கே சுற்றிக் கொண்டிருந்ததைப் பார்த்தான்; திடுக்கிட்டுப் போய்விட்டான்.

"இது எங்கே வந்தது? கபாலிகிட்டேருந்து டபாச்சிகினு வந்துவிட்டதா?" என்று யோசித்துக் கொண்டிருக்கும் போது நாய் ஓடி வந்து அவன் மேல் காலைத் தூக்கிப் போட்டது.

"சீ, கயிதை!" என்று அதைத் தள்ளிவிட்டு நடந்தான். நாய் பின் தொடர்ந்தது. விரட்டினாலும் போகாமல் தொடர்ந்து வந்தது.

குடிசைக்குப் போன முனிசாமி மனைவியை அழைத்து, "இந்தக் கயிதை ஓடியாந்திரிச்சு, புள்ளே!" என்று வியாகூலத்துடன் சொன்னான்,

"அதுக்கு நாம்ப என்ன பண்றது?" என்றாள் மனைவி. அதைச் சரி என்று ஏற்றுக்கொண்டு "ஆமா, நாம்ப என்ன பண்றது?" என்று முனிசாமியும் சொன்னான்.

அன்றிரவு சாப்பிடாமல் கொள்ளாமல் நாய் அவன் குடிசைக்கு முன்னாலேயே படுத்துக்கொண்டது. விரட்டி விரட்டிப் பார்த்தும் பயனில்லாமல் போய்விட்டது.

மறுநாள் இளநீர்க் காய்களைக் கூடையில் வைத்துக் கொண்டு முதன் முதலாக வியாபாரத்துக்குக் கிளம்பினான் முனிசாமி. டாக்டர் வீட்டுக்கு முன் வந்ததும் அவனுக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. நாய் பழைய படியும் வந்து விட்டதற்குத் தான் ஜவாப்தாரி அல்ல என்று காட்டிக்கொள்ளுவதற்கும், தன் மேல் கோபம் கொள்ளாமல் தன்னை நல்லவன் என்று டாக்டர் கருதும் படி செய்வதற்கும் ஒரே உபாயமாக அவனுக்குத் தோன்றிய யோசனைதான் அது.

டாக்டர் வீட்டுக்குள் நுழைந்தான். வாசலில் ஈஸிச் சேரில் படுத்திருக்கும் டாக்டரைப் பார்த்தான்.

"சாமி" என்ற குரல் கொடுத்தான்.

டாக்டர் வலது பக்கம் திரும்பிப் பார்த்தார். அவர் சமாச்சாரம் என்னவென்று கேட்பதற்கு முன்பாகவே, "இளநி சாப்பிடுங்க சாமி—நல்ல இளநி" என்றான் முனிசாமி.

டாக்டர் வாயை திறக்கவில்லை.

முனிசாமி, "இன்னிக்குத்தான் மொதல் மொதல்லெ யாபாரம் பண்ணப் போறேன். நீங்க ஒங்க கையாலே போணி பண்ணனும். ஒண்ணு சாப்பிடுங்க......" என்று சொல்லிக்கெண்டே இளநீர்க் காயை எடுத்து வெட்டத் தொடங்கிவிட்டான்.

டாக்டர் சிரித்தார்.

முனிசாமி சந்தோஷப்பட்டான்.

"இன்னிக்குத்தான் யாபாரமாப்பா? என்ன கிடைக்கும் ஒரு நாளைக்கு?" என்று கேட்டார் டாக்டர்.

"அன்னுடம் முக்கால் ரூபா கெடைச்சாப் போதும் சாமி" என்று சொல்லிவிட்டு இளநீரை டாக்டர் கையில் நீட்டினான்.

டாக்டர் வாங்கிச் சாப்பிட்டார்.

முனிசாமிக்குக் குஷி பிறந்துவிட்டது.

“எப்படிங்க இளநி?” என்று கொஞ்சம் சம்பிரமமாகவே கேட்டான்.

“இருக்குது” என்று அமுத்தலாகப் பதில் சொல்லிவிட்டு டாக்டர் வீட்டுக்குள்ளே போனார். பழையபடியும் வெளியே வந்து, இரண்டணாவை முனிசாமிக்கு முன்பாகக் கீழே போட்டுவிட்டு, ஈஸிச்சேரில் படுத்து வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டார்.

“காசு எதுக்குங்க? வேண்டாமுங்க” என்று முனிசாமி காசை எடுத்துத் திண்ணையில் வைத்தான்.

“கொண்டு போப்பா...மொதல் மொதல்லே யாபாரம் பண்ணப் போறவன்......”

“நீங்க சாப்பிட்டதே எனக்கு ராசிதானுங்க. காசை எடுத்து வெச்சுக்குங்க” என்று சொல்லிக்கொண்டு நின்றான்.

டாக்டர் எழுந்து இரண்டணாவை எடுத்துக்கொண்டு உள்ளே போனார். “சொந்தச் செலவு இரண்டணா” என்று நான்கு கணக்குப் புத்தகங்களில் எழுதி வைத்திருந்ததை ஒவ்வொன்றாக அடித்தார்.

‘கூட ஒரு அணா கேட்பான்னு நினைச்சதுக்குப் பயல் காசே வேண்டாம்னுட்டான்!’ என்று மனசுக்குள்ளேயே மகிழ்ந்துகொண்டு பழையபடியும் வாசல் பக்கம் வந்தார்.

முனிசாமி, “போய்ட்டு வரேனுங்க” என்று சொல்லிக் கும்பிட்டு விட்டுக் கூடையைத் தூக்கினான்; வெளியே போய் விட்டான்.

முனிசாமியின் மனம் அன்று சந்தோஷத்தில் மிதந்தது.

## 3

காலை பத்து மணி இருக்கும். டாக்டர் ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டார். அவர் மனைவியும், ஏகபுத்திரியும்தான்

வீட்டு மாடியில் உட்கார்ந்து சதுரங்கம் ஆடிக்கொண்டிருந் தார்கள். தோட்டக்காரன் வேலையை எல்லாம் செய்து முடித்துவிட்டு வீட்டுக்குப் போய்விட்டான். சமையல்கார னும்கூட டாக்டரின் மனைவி கொடுத்தனுப்பிய ஒரு கடிதத் தைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்காக மாம்பலத்துக்குப் போயிருந்தான். ஆகவே வீட்டில் எஞ்சியிருப்பவை மேற்படி பெண் ஜீவன்கள் இரண்டும், வாயில்லா ஜீவனாகிய ஜாதி நாய் ஒன்றும்தான்.

சதுரங்க விளையாட்டில் ஆழ்ந்த கவனத்தைச் செலுத்தி இரண்டுபேரும் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப் பொழுது சந்தர்ப்பவசமாக வலது பக்கம் திரும்பிப் பார்த் தாள் டாக்டரின் மனைவி. கீழே இருந்து மாடிக்குப் புகை வந்து கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டாள். புகை போக்கி வீட்டின் பின்புறத்தில் தூரத் தள்ளி இருந்தது. அதனால் அந்த இடத்தில் புகை வரக் காரணமில்லையே என்று ஒரு நிமிஷம் யோசித்தாள் அந்த அம்மாள். அப் புறம் தன் மகளைக் கூப்பிட்டு, "கோமளா! அங்கே என்ன புகை வருகிறது?" என்று திகைப்போடு கேட்டாள். கோம ளாவும் திரும்பிப் பார்த்தாள்; அவ்வளவுதான், விளை யாட்டை அப்படியே நிறுத்திவிட்டு, "ஐயோ! இது என்ன வென்று தெரியவில்லையே!" என்று கூவிக்கொண்டு கீழே இறங்கி ஓடிவந்தார்கள். வீட்டின் சமையல் அறையிலும் அதை ஒட்டியிருந்த உக்கிராண அறையிலும் தீப்பிடித்து விட்டது. இருவரும் தன்னை மறந்துவிட்டார்கள். உத விக்குச் சமையல்காரன்கூட இல்லை. பக்கத்து வீட்டுக் காரர்கள், 'மெட்ராஸ்காரர்'களான படியால் உதவிக்கு வரு வார்களா என்பது யோசித்துப் பார்க்கவேண்டிய விஷயம். அத்துடன் அவர்கள், தீ இவ்வளவு தூரம் பற்றிக் கொழுந்து விட்டு எரிந்தும், வாசம் பட்டாவது அதைக் கண்டுபிடித்துக் கொண்டதாகத் தெரியவில்லை. வீட்டில் உள்ளவர்க்கே தெரியாமல் போய்விட்டபோது, பக்கத்து வீட்டுக்காரர் களுக்குத் தெரியாமல் போனது ஆச்சரியப்படத்தக்க விஷயம் இல்லைதான்.

கோமளா தீயணைக்கும் படையினருக்குப் போன் செய்தாள். அப்புறம் இரண்டுபேரும் தெருவுக்கு வந்து கத்தினார்கள். டாக்டரின் மனைவி, இடையிடையே சமையல்காரனைத் திட்டுவதற்கும் மறந்துவிடவில்லை. அதி சீக்கிரத்திலேயே கூட்டம் கூடிவிட்டது. வந்தவர்களில் பெரும்பான்மையோர் எதுவும் செய்யாமல் நின்று கொண்டிருந்தது போதாதென்று, "தீ எப்படிப் பிடித்தது?' "தீபிடிக்கக் காரணமே இல்லையே!" "ஒரு ஐந்து நிமிஷத்துக்கு முன்னால் கூட ஒன்றுமில்லையே" என்று பலவாறாக ஆழ்ந்த அனுதாபத்துடன் பேசிக்கொண்டிருந்தார்கள். தோட்டக்காரன், வேலைக்காரன், கக்கூஸ்காரன் கத்திரிக்காய் வியாபாரி—இந்த வர்க்கத்தில் சேர்ந்த ஆசாமிகள் அந்தக் கூட்டத்தில் சிறுபான்மையோராக இருந்தார்கள். இந்தச் சிறுபான்மையோரிலும் சிறுபான்மையோர் வீட்டுக்குள் பாய்ந்து நெருப்பை அணைக்க முயன்றார்கள். அப்பொழுது பக்கத்துப் பங்களாக்காரர், டாக்டரின் மனைவியைப் பார்த்து, "உள்ளே போன பயல்கள் வெளியேவரும் போது ஜாக்கிரதையாகக் கவனிக்க வேண்டும். எதையாவது திருடிக் கொண்டு போய்விடுவார்கள்" என்று ஆங்கிலத்தில் சொல்லி எச்சரித்தார், அப்புறம் அங்கே எஞ்சி நின்ற மேற்சொன்ன சிறுபான்மையோரைப் பார்த்து, "என்னப்பா, பேசாமல் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள்? வேடிக்கை பார்க்கிறீர்களா? போய் நெருப்பை அணைப்பதுதானே?" என்று இறைந்து சொன்னார். அவ்வளவில் இரண்டொருவர் வீட்டுக்குள் ஓடினார்கள். கோமளா, "ஐயோ! அது போய் விட்டதே! இது போய்விட்டதே" என்று புலம்பிக் கொண்டே இருந்தாள். தீக்கொழுந்து தெருவுக்குத் தெரிய ஆரம்பித்துவிட்டது.

உள்ளே போன ஒருவன் வெளியே ஓடிவந்து, "ஏன் சாமி, எல்லோரும் வந்து சாமானை ஒதுங்க வையுங்களேன்" என்று கூவினான். உடனே, பக்கத்துப் பங்களாக்காரர், "போங்கப்பா, சமயத்தில் ஒத்தாசை செய்யக்கூடாதா?" என்று சிறுபான்மையோரைப் பார்த்து வேண்டிக்கொண்

டார். அவரைத் தொடர்ந்து வேறு சில பங்களா வாசிகள் அவ்வண்ணமே சொல்லிவிட்டு, தாங்கள் பேசிக்கொண்டிருந்த விஷயத்தைப் பழையபடியும் பேச ஆரம்பித்துவிட்டார்கள். ஓர் ஆபீஸர், "சார்! நான் மெஜுராவில் இருந்தபோது, இப்படித்தான் திடீரென்று..." என்று தம் அனுபவத்தை அல்லது கட்டுக் கதையை ஆரம்பித்தார். மற்ருெரு பங்களாக்காரர், "எப்படித் தீப்பிடிக்க முடியும்? தீப்பிடிக்கக் காரணமே இல்லையே!" என்று திகைப்போடும் திரும்பத் திரும்பவும் சொல்லிக்கொண்டிருந்தார். வெகு நேரமாக அவர் இப்படியே சொல்லிக்கொண்டிருப்பதைப் பார்த்த ஒரு வாலிபப் பையன், "ஏன் சாமி, காரணம் இல்லாமே தீப்பிடிச்சிருக்குமா? 'காரணம் இல்லையே, காரணம் இல்லையே' என்று சும்மா சொல்லிக்கினே இருக்கீங்களே!" என்று சொல்லிவிட்டுச் சிரித்தான். அவருக்குக் கோபம் வந்து விட்டது. ஆனுலும் எதுவும் செய்ய முடியவில்லையே என்று வருந்தி, வாயைமூடிக்கொண்டார். ஆனுல், பக்கத்தில் நின்ற மூன்று மாடிப் பங்களாக்காருக்குப் படுகோபம் வந்துவிட்டது. "ஏண்டா ஃபூல், எல்லாரோடும் போய் நெருப்பை அணைக்கிறதற்குத் துப்பில்லை. வாய்ப் பேச்சுப் பேசுகிருன் வாய்ப்பேச்சு!" என்று அந்த வாலிபப் பையன் மீது சீறி விழுந்தார். அவன் ஒரு மாதிரி ஆசாமி, உடனே துடுக்காகப் பதில் சொல்ல ஆரம்பித்து விட்டான். "நீங்களும் போய் நெருப்பை அணைக்கிறதுதானே? உங்களுக்கு என்ன உடம்பிலே பலமில்லையா? இல்லேன்னு, டாக்டர் உங்களுக்கு ஆகாதவரா? அவர் காலமெல்லாம் உங்களுக்கு வைத்தியம் பார்த்தாரா? எங்களுக்கு வைத்தியம் பார்த்தாரா?" இவ்வாறு அவன் தமிழில் சொல்ல, அவர் அவனை இங்கிலீஷில் திட்ட, ஒரு சண்டையே ஆரம்பித்து விட்டது. இந்தக் களேபரத்தில்...

முனிசாமி எங்கோ இருந்து அங்கு வந்து சேர்ந்தான். "நம்ப டாக்டர் ஐயா ஊடில்லே!" என்று சொல்லிக் கொண்டே வீட்டுக்குள்ளே பாய்ந்தான். மறு நிமிஷத்தில் தீயணைக்கும் படையினரும் டாக்டரும்வந்து சேர்ந்தார்கள். நாலா பக்கங்களிலிருந்தும் ரப்பர்க் குழாய்கள் மூலம்

தண்ணீரை உள்ளே பீச்சினுர்கள். டாக்டர் மிகுந்த கோபா வேசத்துடன் சமையல்காரனைத் திட்டினுர். அவர் திட்டு வதைப் பார்த்து, அது வரையிலும் மெல்லிய குரலில் சமையல்காரனைத் திட்டிக்கொண்டிருந்த அவர் மனைவி உரத்த குரலில் திட்டத் தொடங்கினுள். யாராவது ஒருவர் திட்டினுல் போதும் என்று எண்ணியவர்போல வீட்டுக் குள்ளே நுழைந்தார் டாக்டர். தீயணைக்கும் படையினரின் தண்ணீர் தம் மேல் படாதவாறு ஓர் இடத்தில் நின்று கொண்டு, டாக்டர் காரியாதிகளைக் கவனித்துக் கொண் டிருந்தார்.

வெளியாட்களில் முனிசாமி ஒருவன்தான் உள்ளே இருக்கும் எல்லாச் சாமான்களையும் அப்புறப்படுத்த வேண் டும் என்று முயற்சி செய்து கொண்டிருந்தான். தீயணைக்கும் படையினரில் இரண்டொருவரின் ஒத்தாசையுடன், அரிசி மூட்டைகளை வராந்தாவில் கொண்டு வந்து போட்டான். அவன் உடம்பெல்லாம் தண்ணீரும் புகையுமாக இருந்தது. 'வெளியே வாப்பா' என்று டாக்டர் இரண்டொரு முறை சொல்லியும் அவன் வராமல் சாமான்களை எடுத்துப் பத்திரப் படுத்திக் கொண்டே இருந்தான். கடைசியில் ஒரு மட்டும் தீயை அணைத்தாய் விட்டது. தீயணைக்கும் படையின் தலைவர் டாக்டருக்கு முன்னுல் நின்ற முனுசாமியைச் சுட்டிக் காட்டி "உங்கள் வேலைக்காரன் சரியான ஆசாமி. அவன் ஒத்தாசை இல்லாவிட்டால் இவ்வளவு சீக்கிரத்தில் நெருப்பை அணைத் திருக்க முடியாது" என்று ஆங்கிலத்தில் சொன்னுர். டாக்டர் உடனே அதை மறுத்து "இவன் என் வேலைக்காரனல்ல" என்றுர்.

தலைவர் திகைத்து, "அப்படியானுல் இவன் யார்?" என்று கேட்டார்.

பக்கத்தில் உள்ள தோப்பில் 'குடியிருக்கும் முனுசாமி' என்று டாக்டர் சொல்லி யிருக்கலாம். ஆனுல் முனிசாமி யைப் போன்ற ஒரு சாதாரணமான ஆளைப்பற்றி அவ்வளவு விவரமாகத் தெரிந்திருப்பதை வெளியே காட்டிக் கொள் ளுவது தம்முடைய அந்தஸ்துக்கு ஏற்றதாக டாக்டருக்குத்

தோன்றவில்லை. அதனல் "எவனே ஒருவன், என் வேலைக் காரனல்ல" என்று ஆங்கிலத்தில் பதில் சொன்னர். முனி சாமிக்கு எதுவும் புரியவில்லை. டாக்டரையும், அந்த உத்தியோகஸ்தரையும் மாறி மாறிப் பார்த்துப் புன்னகை செய்துகொண்டே நின்ருன். அவனுக்கு ஏனே ஒரு பூரிப்பு!

எல்லாக் குரல்களும் அடங்கிவிட்டன. அமைதியோடு எல்லோரும் வீடு திரும்பும் சமயம். ஆனல் நான்கே நான்கு குரல்கள் மட்டும் அடங்கவில்லை. இரண்டு, மனிதக் குரல்கள்; மீதி இரண்டும் நாயக் குரல்கள்.

மனிதக் குரலில் ஒன்று;

"ராஸ்கேல், அவன் பேசுவதைப் பார்த்தீர்களா? இல்லிட்டரேட் புரூட்! செருப்பாலடி இடியட்!"

அதற்குப் பதில் குரல்:

"சாமி, உங்களுக்குத்தான் இங்லீஷ் தெரியும்னு நீட்டாதீங்கோ. மருவாதைக்குப் பாத்துக்கினு இருக்கேன், இல்லேன்ன எனக்கும் பேசத் தெரியும்."

குரல்வந்த இடத்தைச் சூழ்ந்து எல்லோரும் கூடி விட்டார்கள். இங்கிலீஷ் வார்த்தைகளைக் கலந்து திட்டியவர், முன்னல் குறிப்பிட்ட மூன்று மாடிப் பங்களாக்காரர். இங்கிலீஷ் வார்த்தைகளைக் கலக்காமலும், திட்டாமலும், ஆனல் திட்டுவதற்கு ஆசைப்பட்டுக் கொண்டும் பேசியவன் அந்த வாலிபப் பையன். இந்த இருவர் சண்டையும் அது வரையிலும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டுதான் இருந்தது என்ற விவரம் அப்பொழுதுதான் எல்லோருக்கும் தெரிய வந்தது. பலருடைய பிரம்மப் பிரயத்தனத்தின் பேரில் சண்டை நின்றது. அவரவர் தத்தம் இருப்பிடத்தை நோக்கிப் புறப்பட்டுப் போய்விட்டார்கள்.

டாக்டர், அவர் மனைவி, கோமளா, அவர் வீட்டு நாய், முனிசாமி, அவனுடைய மனைவி; அவன் வீட்டில் வளர்ந்த வெறும் நாய்—இந்தக் கூட்டம்தான் இப்பொழுது அங்கே நின்றது நாய்கள் இரண்டும் வெகு நேரமாகச் சொல்–சண்டை போட்டு முடித்து, பிறகு வாய்ச் சண்டை

போட்டு வந்ததைக் கவனிப்பதற்கு அப்பொழுதுதான் சமயம் வந்தது. டாக்டர் கோபத்துடன் திரும்பிப் பார்த்தார். தெருவில் காலடி எடுத்துவைப்பதற்குள் முனிசாமி ஒரே வேகமாக வெளியே வந்து ஒரு கல்லை எடுத்து வெறும் நாய்மீது எறிந்தான். கல்பட்டு நாய்க்குக் கால் ஒடிந்துவிட்டது ஒடிந்த காலுடன் நாய் கத்திக் கொண்டே ஓடி மறைந்தது. முனிசாமி பயத்துடன் திரும்பி வந்து, பயத்தைப் போக்கிக்கொள்ளுவதற்காக டாக்டரைப் பார்த்து, "அந்தச் சனியனை மோட்டுக் குப்பத்துக்குத் தொர்த்தினாலும் இங்கேயே ஓடி ஓடி வந்துடுது சாமி. இனி என்னத்தைப் பண்றது?" என்றான்.

டாக்டர் ஒரு பதிலும் சொல்லவில்லை. அவர் தம் மனைவியோடும் மகளோடும் வீட்டுக்குள் புகுந்தார். தேடு வாரில்லாமல் முனிசாமியும், அவன் மனைவியும் அங்கேயே அனுவசியமாக நின்றுகொண்டிருந்தார்கள். முனிசாமியின் மனைவி கோபத்துடன் அவனைப் பார்த்து, "ஏன் மச் சான், உனக்கு மான ஈனம் கெடையாது? 'போய் வாப்பா'ன்னு கூடச் சொல்லாமே அவரு ஊட்டுக்குள்ளே போயிட்டாரு. நீ இங்கேயே ஏன் நின்னு சாகிறே? டாக் டரு உனக்குச் சாப்பாடு போடப்போறாரா?" என்று வெடுக் கென்று கேட்டாள். மனைவி பயமில்லாமல் இப்படிப் பேசுவது முனிசாமிக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் அதற்காக அவளைக் கண்டிக்கவில்லை.

இருவரும் குடிசைக்கு வந்து சேர்ந்தார்கள். டாக்ட ருக்கு உதவி செய்ய ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்ததை நினைத்துச் சந்தோஷத்தில் ஆழ்ந்தான் முனிசாமி.

## 4

ஒரு மாதம் கழிந்துவிட்டது. வெறும் நாய், கபாலி வீட்டில் அரைக்கணம்கூடத் தங்காமல், முனிசாமியின் குடிசையையும், சுற்றுப் பக்கத்தையுமே வட்டம் போட்டுக் கொண்டிருந்தது. அது எங்கு சாப்பிடுகிறதென்று யாருக்கும் தெரியாது. ஏகதேசமாக, டாக்டர் காரை வீட்டு

இறங்கி வீட்டுக்குள் நுழையும்போது அது மகா பயங்கர மாகக் குரைத்துக்கொண்டும் இருந்தது. மூன்று மாதங் களுக்கு முன் தன்மேல் படாதவாறு டாக்டர் கல்லைவிட் டெறிந்ததை அது இன்னும் மறக்கவே இல்லை. டாக்டர் வெளியே வரமாட்டாரா, அவர் வீட்டு ஜாதி நாயாவது தப்பித்தவறி வெளியே வராதா என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் பாவனையில், அது அந்த வீதியையும், வார் டையும் சுற்றிக் கொண்டிருந்தது. வெளியூரிலிருந்து புதிதாக அங்கு வந்து சுமார் ஒரு வாரம் தங்கிவிட்டுச் செல்லும் எந்த ஒரு நபருக்கும் அந்த வார்டில் உள்ள பிரமுகர்களையும், பெரிய மனிதர்களையும்விட வெறும் நாய்தான் அதிகமாக அறிமுகமாகியிருந்தது. அப்படியானால் நாய் முனிசாமி வீட்டிலும் இல்லாமல், கபாலி வீட்டிலும் இல்லாமலும் 'தெருவாச'த்தையே நம்பிக் காலம் கழித்துக் கொண்டி ருந்தது என்பது தானே விளங்கும் கபாலி வா' என்றால், வராமலும் முனிசாமி 'போ' என்றால் போகாமலுமாக இருந்து வந்தது வெறும் நாய்.

அப்போது முனிசாமியின் மனைவிக்குத் திடீரென்று கண்ணில் ஏதோ கோளாறு ஏற்பட்டுத் தீயாக எரியத் தொடங்கியது. இதற்குக் காலாகாலத்தில் ஒழுங்காக எண் ணெய் ஸ்நானம் செய்துகொள்ளாததே காரணமாக இருக் கும் என்று முதலில் நினைத்தார்கள். ஆனால் இரண்டொரு நாட்களில் பார்வையே சிறிது மங்க ஆரம்பித்துவிட்டது போலத் தோன்றியது. கண்ணை நன்றாக விழித்துப் பார்க்க வும் முடியவில்லை. இதைக் கண்டு அவளும் முனிசாமியும் பயந்துவிட்டார்கள். பக்கத்துக் குடிசைக்காரர்களிடம் போய் விஷயத்தைத் தெரிவித்தார்கள். எல்லோரும் ஒரு மிக்க ''ஆஸ்பத்திரிக்கு இட்டுண்டு போப்பா'' என்று சொன்னார்கள். அப்படியே செய்வதென்று முடிவு கட்டி இருவரும் குடிசை வந்து சேர்ந்தனர். உட்கார்ந்து ஒரு முறை வெற்றிலை போட்டான் முனிசாமி. உடனே அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. தர்ம ஆஸ்பத்திரிக் குப் போனால் ஏழைகளைக் கவனிக்க மாட்டார்கள்; கவ

னித்தாலும் உண்மையான மருந்து கொடுக்க மாட்டார்கள் என்று கருதி, பக்கத்திலே குடியிருக்கும் டாக்டரிடம் அழைத்துச் செல்வதே உசிதம் என்று தீர்மானித்தான். அந்த டாக்டர்தான் முனிசாமியின் வெறும் நாயைச் சுட்டு விடுவதாகப் பயமுறுத்தியவர்; அந்த டாக்டரின் வீடு தீப் பற்றிக்கொண்டபோதுதான் முனிசாமி ஓடிப்போய் உதவி செய்தது.

மனைவியைக் கூப்பிட்டான். டாக்டர் வீட்டுக்குப் போகும்படி கூறினன். அவள் முதலில் தயங்கினுள், 'அப்படியானுல் ஆஸ்பத்திரிக்குப் போ' என்ருன். அந்த டாக்டரின் ஆஸ்பத்திரிக்குத்தான். அதற்கும் அவள் தயங்கினுள். ஆனுல் முனுசாமியோ நம்பிக்கையும் சந்தோஷமும் தொனிக்கின்ற குரலில், "நீ போ. போய் நான் அனுப்பியதாகச் சொல்லு. எல்லாக் காரியங்களும் தன்னுலே நடக்கிறதா இல்லையான்னு பாரு" என்ருன். அவன் வேலைக்குப்போக வேண்டியிருந்ததால், அவளோடு ஆஸ்பத்திரிக்குப் போய் வர முடியவில்லை. கடைசியில் அவள் மட்டுமே தனியாக ஆஸ்பத்திரிக்குப் போகும்படி நேரிட்டது. பாட்டிலும் கையுமாக அங்கே போய்ச் சேர்ந்தாள். ஆஸ்பத்திரி வாசலில் பத்துப் பன்னிரண்டு புதுக் கார்கள் நின்று கொண்டிருந்தன. வராந்தாவில் கிடந்த அத்தனை நாற்காலிகளிலும் ஆண்களும் பெண்களுமாக அநேகர் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் எந்த ஒரு பெண்ணின் ஆடையாபரணங்களைக் கழற்றி விற்ருலும் முனிசாமியின் குடும்பத்தைப் போல ஒரு குடும்பம் வாழ்நாள் முழுவதுமே சௌகரியமாகச் சாப்பிட வழி செய்து கொள்ளலாம். அப்படியானுல் அந்தப் பெண்களும் அந்தப் பெண்களோடு வந்தவர்களும் பெரிய பணக்காரர்கள் என்பதை எளிதில் ஊகித்துக் கொள்ளலாம்.

இந்தக் கூட்டத்தைக் கண்டதும், முனிசாமியின் மனைவிக்கு மேற்கொண்டு அடியெடுத்துவைக்கத் தோன்றவில்லை. இவ்வளவு பெரிய பணக்காரர்களுக்கு மத்தியில் தன்னைப்போன்ற ஒருத்தியை டாக்டர் கவனிப்பாரா என்று சந்தேகப்பட்டாள். ஆஸ்பத்திரிக்குப் போவதை முன்னிட்

டுத்தான், தன் கல்யாணத்துக்கு வாங்கிய புடவையை எடுத்து உடுத்தி, தலையில் எண்ணெய் தடவி வாரிவிட்டு, நெற்றியில் குங்குமப் பொட்டு இட்டுக்கொண்டு, கோவிலுக்குப் போவதுபோல அவ்வளவு பவித்திரமாக வந்தாள். அவளுடைய சிங்காரம், இந்தப் பணக்காரர்களின் அலங்காரத்துக்கு முன் களையிழந்துவிட்டது. இதனால் அவளுக்கு ஓர் ஏமாற்றம்; ஓர் அவமான உணர்ச்சி. இருந்தாலும் மனதைச் சரிப்படுத்திக்கொண்டு, தைரியமாக ஒரு மரத்தடியில் ஒதுங்கி நின்றாள்; அதாவது காத்துக்கொண்டு நின்றாள்.

'டாக்டர் மருந்து போடுவாரா? கையிலே காலணாக்கூடக் கொண்டு வரவில்லையே! வீட்டிலேகூடக் காலணா இல்லையே! முந்தாநாள் வேர்க்கடலை வாங்கித் தின்றது வம்பாகப் போய்விட்டது. அந்தக் காசு இருந்தால்...உம், அந்தக் காசு இருந்தாலும் மருந்துக்குச் சரியாகப் போகுமா! அதனால் வேர்க்கடலை வாங்கித் தின்றதில் தப்பில்லைதான்... நம்ப மச்சான் டாக்டருக்கு எவ்வளவோ செய்திருக்கிறாரே. அன்றையத் தினம் தீப்பிடித்துக்கொண்டபோது இவர் போய் அரிசி மூட்டைகளை நகர்த்தாவிட்டால் அவ்வளவு அரிசியும் பாழாகியிருக்கும். டாக்டருக்கு எவ்வளவு பணம் மிச்சம்! இது செய்ததற்கு ஒருவேளை மருந்து கூடவா போடமாட்டார்? அதுவும் நான் காசு கொடுக்க முடியாத ஏழை என்று தெரிந்த பிறகு? இவர்கள் நம்மைப்போல நன்றி கெட்டவர்களாக இருக்க மாட்டார்கள். பெரிய மனுஷர்களுக்குப் பெரியமனசு இருக்கும். கட்டாயம் மருந்து போட்டுக் கொண்டுதான் வீட்டுக்குப் போகப்போகிறேன். அதோ அந்த நாற்காலியில் உட்கார்ந்திருப்பவர் அன்று தீப்பிடித்துக் கொண்டபோது அங்கு வந்து நின்றுகொண்டிருந்ததுபோலத் தோன்றுகிறதே! ஆமாம், இவரேதான். இவர்தான் மூன்றுமாடிப் பங்களாக்காரர்; இங்கிலீஷிலேயே திட்டிக்கொண்டு ஒரு வாலிபப் பையனுடன் சண்டை போட்டவர். "நீங்கள் போய்த் தீயை அணைப்பது தானே?" என்று சொன்னதற்கு இவருக்கு எப்படிப் பொல்லாத கோபம் வந்துவிட்டது! இதேஆள், சமயத்தில்

ஓடிப்போய் டாக்டருக்கு உதவி செய்யாத இதே ஆள், எப்படி இப்பொழுது டாக்டரின் முகத்தில் தைரியமாக விழிக்கிறார்! வேடிக்கைத்தான்! இருந்தாலும் நம்மைப் போன்ற ஆட்களுக்கு இப்படித் தைரியம் வராதம்மா, இப்படித் தைரியம் வராது...'—இப்படியே முனிசாமியின் மனைவி யோசனை செய்து கொண்டிருக்கும்போது டாக்டர் கைகளைத் துடைத்துக்கொண்டு வராந்தாவுக்கு வந்தார். எல்லோரும் அவரைத் திரும்பிப் பார்த்தார்கள். முனிசாமியின் மனைவிக்கு நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. மனப் படபடப்பைக் குறைக்க ஒரு அரை அடி தள்ளி நின்று கொண்டாள்.

முனிசாமியின் மனைவியைத் தவிர எல்லோரையும் 'வாருங்கள்' என்று உபசரித்துவிட்டு வலது புறம் திரும்பினார் டாக்டர். அங்கே உட்கார்ந்து கொண்டிருந்த மூன்று மாடிப் பங்களாக்காரரைப் பார்த்துதான் தாமதம், உடனே "அடேடே! வாருங்கள், வாருங்கள்! நான் கவனிக்காமல் இருந்துவிட்டேனே! வெகு நேரம் ஆகிவிட்டதா? ஏன் நேரே உள்ளே வருவதுதானே? உடம்பு எப்படியிருக்கிறது?" என்று அன்பு ததும்ப உபசரித்தார். முனுசாமியின் மனைவிக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'தன் வீட்டுக்கு விபத்து நேர்ந்தபோது கையைக் கட்டிக் கொண்டு நின்றவரையா, டாக்டர் இப்படி உபசரிக்கிறார். ஒரு வேளை அது டாக்டரின் பெருந்தன்மையாக இருக்கும்? அது சரி, ஆனால் இந்த மூன்றுமாடிப் பங்களாக்காரருக்கு உடம்புக்கு ஒன்றும் ஏற்பட்டதாகத் தெரியவில்லையே! ஏன் டாக்டரிடம் வந்திருக்கிறார்?'—இவ்வாறெல்லாம் அவள் யோசித்தாள்; திகைத்தாள். நாலைந்து நாட்களாகச் சரியாகத் தூக்கம் வராமல் மூன்று மாடிக்காரரர் எவ்வளவு கஷ்டப் படுகிறார் என்று அவளுக்குத் தெரியாது. அதனால் தான் திகைப்பு.

டாக்டர் அதி சீக்கிரத்தில் எல்லா 'நோயாளிகளின் நோய்களையும்' பரீக்ஷை செய்து பார்த்தார். அப்புறம் அவரவர்களின் அந்தஸ்துக்குத் தக்கபடி மருந்து கொடுத்

தார். அதன்பின் அவசர அவசரமாக எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு வெளியே புறப்பட்டுவிட்டார்; வெளியே என்றால் வீட்டுக்குத்தான். அவர் வாசல் முற்றத்தில் நிற்கும் காரை நோக்கி நடந்துவரும்போது மற்றவர்களும் பின்னால் நடந்து வந்தார்கள்.

டாக்டர் காரில் ஏறப்போகும்தருணம். முனிசாமியின் மனைவிக்கு டாக்டரின் பக்கத்தில் போகவே பயமாக இருந்தது. இருந்தாலும், ஒருவாறு சமாளித்துக்கொண்டு எப்படியோ பக்கத்தில் போய்விட்டாள். டாக்டரின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க முடியாதவாறு ஒரு வெட்கமும் ஒரு பயமும் குறுக்கிட்டன. கண் கோளாறினால் கண்ணில் நீர் கொட்டியது போதாதென்று, இந்தப் "பய"த்தின் காரணமாகவும் அவளுடைய கண்களில் அதிகமாகக் கண்ணீர் பொங்கத் தொடங்கியது. என்ன செய்வது, என்ன சொல்லுவது என்ற விஷயங்களையே அவள் மறந்துவிட்டாள். கன்னத்தில் அடிவாங்கிய முகம்போல அவளுடைய முகம் சிவந்து விகாரமாகி விட்டது; வாய் கோணியது; வார்த்தைகள் குழறின. தப்பிப்பதற்கு ஒரே உபாயம் தலையைத் குனிந்து கொள்ளுவதுதான். அவளும் அதைத் தான் செய்தாள்.

டாக்டர் முகத்தைச்சுளித்துக்கொண்டு பேசினார்; காலில் முள் தைத்துவிட்டால் முகத்தில் எப்படிப்பட்ட மாறுதல் ஏற்படுமோ, அப்படிப்பட்ட மாறுதல் ஏற்பட்டது டாக்டரின் முகத்தில். மிகவும் எரிச்சலாகப் பேசுவதுபோல், "நீ யாரு புள்ளே? ஏன் இங்கே வந்து நிற்கிறே?" என்று கேட்டார். அங்கிருந்த கூட்டத்தில் பெரும்பாலோர்டாக்டரையும் அவளையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அவளால் பதில் சொல்ல முடியவில்லை.

எரிந்துவிழுவதுபோல், "ஏன் இங்கே வந்தே?" என்று இரண்டாவது தடவையும் கேட்டார் டாக்டர். அவள் பதில் சொல்ல முயன்றுகொண்டிருக்கும்போது, ஒரு பங்களாக்காரர், "டாக்டர்! 'குட்பை'. அப்போ நான் நாளைப் பார்க்கிறேன். குட்பை, குட்பை" என்று விடை பெற்றுக்

கொண்டுபோய்விட்டார். டாக்டர், எரிச்சல் நிறைந்த தம் முகபாவத்தை மாற்றி, அதே முகத்தைத் தாமரைப் பூ மாதிரி மலரச் செய்து அந்த மனிதருக்குக் கூப்பிய கரங்களுடன் விடைகொடுத்தனுப்பினார். உடனே மறு புறம் திரும்பி, "அவாளை எங்கே காணல்லே?" என்று தேடினார். 'அவாள்' "கமிங், கமிங் டாக்டர்" என்று சொல்லிக்கொண்டே கூட்டத்தைப் பிளந்துகொண்டுவந்து சேர்ந்தார். அவர்தான், டாக்டரின் வீடு, தீப்பிடித்துக் கொண்டபோது, அணைக்கப் போகாமல் வாலிபனுடன் இங்கிலீஷில் சண்டை போட்டுக்கொண்டிருந்த மூன்று மாடிக்காரரர். டாக்டரின் பெருமதிப்புக்கு ஆளானவரும், அந்தக் கூட்டத்திலேயே பெரும் பணக்காரரும் அவரே. டாக்டரின் வேண்டுகோளுக்கிணங்கி அவருடைய காரிலேயே ஏறித் தம்வீட்டுக்குப் போகத் தீர்மானித்தார், அந்தமனிதர்.

அந்த மனிதருக்கு இப்படி ராஜ மரியாதை செய்வதைக் கண்டு இப்பொழுது அவள் வருத்தப்படவில்லை. டாக்டர் கேட்டதற்குப் பதில் சொல்ல முடியவில்லையே என்ற வருத்தம் ஒன்றுதான். டாக்டர் மிகுந்த கோபத்துடன் அவளைத் திரும்பிப் பார்த்தார்.

"விஷயம் என்னவென்று சொல்றயா? கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளச் சொல்லவா?" என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாகக் கேட்டார்.

இப்பொழுதுதான் அவளுக்குத் துணிவு வந்தது. "கண்வலிங்கோ" என்று சொல்லி இலேசாக ஏறிட்டுப் பார்த்தாள்.

"கண் வலியா? கண் நல்லாத்தான் இருக்குது. வேணும்னு ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போ" என்று சொல்லிவிட்டு டிரைவரைப் பார்த்துத் திரும்பினார். டிரைவர் அவளையே கூர்ந்து பார்த்துக்கொண்டிருந்ததால், டாக்டரின் சமிக்ஞையைக் கண்டு காரைத் திடீரென்று ஓட்டிவிடவில்லை.

"முனிசாமியோட வீட்டுக்காரிங்க நான். அவருதான் அனுப்பி வச்சார்—நாலு நாளாக் கண்வலி. கண்ணு

கூடச் சரியாத் தெரியலே" என்று நடுங்கிக் கொண்டே சொன்னாள். தான் முனிசாமியின் மனைவி என்று சொல்லி விட்டால் அங்கே ராஜ மரியாதை நடக்குமென்று அவளும் கூட எதிர்பார்த்தாள்.

டாக்டருக்குக் கோபம் வந்துவிட்டது. "எந்த முனி சாமி?" என்று ஒரு கேள்வியைப் போட்டார்.

அவளும் ஒரு வழியாக, "உங்க வீட்டுப் பக்கம் தென்னந் தோப்பிலே குடியிருக்கிற முனிசாமிங்க—அன்னிக்குத் தீப்பிடிச்சிட்டபோது வந்து..." என்று சொல்லி முடிக்கு முன்பே, டாக்டர் கதவை 'டப்'பென்று இழுத்துச் சாத்திக் கொண்டு, "விடு காரை" என்று டிரைவருக்கு உத்தரவுபோட்டார். மறு நிமிஷம் கார் புறப்பட்டுப் போய் விட்டது. கார் நின்ற இடத்தில் புழுதிதான் பறந்தது. கண்ணில் மருந்து போட்டுக்கொண்டு வரச் சென்றாள்— ஆனால் மருந்துக்குப் பதிலாக மண்தான் வந்து விழுந்தது. முந்தானையால் கண்களைத் துடைத்துக்கொண்டே அவ்விடத்தைவிட்டு நகர்ந்தாள். அவள் குடிசைபோய்ச் சேரும்போது மணி பதினொன்று ஆகிவிட்டது.

## 5

ஊரறிய அவமானப்படுத்தப்பட்டவள்போல மன வேதனைக்கு ஆளானாள் முனிசாமியின் மனைவி. 'நான் அனுப்பினேன்'ன்னு டாக்டர்கிட்டே சொல்லு, புள்ளே' என்று முனிசாமி நம்பிக்கையோடு சொல்லியனுப்பியதும், இவளும் நம்பிக்கையோடு போனதும்...கடைசியில் என்னவாயிற்று? டாக்டருடைய கார் புழுதியை வாரிப்போட்டது. டாக்டருக்கோ அவள் மீது அத்தனை பெரிய மனிதர்களுக்கு மத்தியில், முனிசாமியின் மனைவி என்று அவள் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளலாமா? அதன் மூலம் முனிசாமி என்ற ஒரு சாதாரண மனிதன், டாக்டரின் ஞாபகத்தில் இடம் பெறக்கூடிய அந்தஸ்துடையவனாகி விடுவான் அல்லவா? அதன் மூலம் முனிசாமியின் அந்தஸ்து உயருவதற்குப் பதிலாக, டாக்டரின் அந்தஸ்து

குறைந்துவிடும் அல்லவா? இதெல்லாம் அவளுக்குத் தெரியாது. அவளுக்கு ஏற்பட்ட அவமானத்தைவிட டாக்டருக்கு ஏற்பட்ட அவமானம் அதிகம் என்பது அவளுக்கு எப்படித் தெரியும்? 'முனிசாமி! இடியட்! அவன் என்ன பெரிய பிரபுவோ?' இப்படி ஒரே குமட்டலும் அருவருப்புமாக டாக்டர் மனத்திற்குள் திட்டிக்கொண்டே போனது அவளுக்குத் தெரியவே தெரியாது. அவள் கோபப்படுவதற்கு இதெல்லாம் தெரிய வேண்டுமென்ற அவசியமே இல்லை. கோவிலுக்குப் போகிறவர்களைப் போல, தகுந்த உடை உடுத்தி, பக்தி சிரத்தையோடு, பக்கத்து வீட்டு டாக்டர் என்ற முறையிலும் சற்று உறவுப்பான்மையுடன் ஆஸ்பத்திரிக்குப் போனவள், தேடுவாரற்று, கவனிப்பாரற்று, அவமானத்துக்கும் ஆளாகி வீடு திரும்ப நேர்ந்ததை நினைத்து அவள் மனம் கொதிப்படைந்தது. கொதிப்பும் கோபமும் முனிசாமியின் மீதுதான், டாக்டரின் மீதல்ல நல்ல வேளையாக அப்பொழுது முனிசாமி அங்கில்லை. இருந்திருந்தால் என்ன நடந்திருக்கும் என்று ஊகிக்கக்கூட முடியாது.

சாப்பிடாமலே ஒரு பாயில் போய்ப்படுத்தாள். கண்வலி அதிகமாகிக்கொண்டே இருந்தது. கசக்கிக் கசக்கிக் கண் சிவந்து விட்டது. முனிசாமியை நினைக்கும்போதெல்லாம் அவள் மனம் ஒரு பத்து நிமிஷம் படபடவென்று அடித்துக் கொள்ளும்.

அவன் அடிக்கடி டாடக்டரைப் புகழுவதுண்டு; அவருடைய கீர்த்தியைப் பாராட்டிப் பாராட்டி அவளும் அப்படிப் பாராட்டவேண்டும் என்று எதிர்பார்ப்பதும் உண்டு. நாளாரம்பத்தில் அவளும் முனிசாமியுடன் சேர்ந்து டாக்டரைப் பாராட்டலானாள். டாக்டர் வீடு தீப்பற்றிக் கொண்டபோது அவன் முன்னேறிப் போய் ஒத்தாசைகள் செய்வதைக் கண்டு அவள் மனம் பூரித்தது உண்மையே. ஆனால், இவ்வளவுக்கும் பிறகு, டாக்டரோ அவர் மனைவியோ அவர் மகளோ அன்பாக ஒரு வார்த்தை பேசவில்லை. அவனிடமும், பேசவில்லை; அவளிடமும் பேசவில்லை;

அதனால் அன்று கணவன் மீது கோபத்துடன் சீறி விழுந்தாள். ஆனாலும், மறுநாள் விடிந்ததும் அந்தக் கோபம் மாறிவிட்டது. டாக்டர் வீட்டு ஆட்களின் தரிசனம் தேவ தரிசனமாக இந்தக் குடிசைத் தம்பதிகளுக்குத் தெரியத் தொடங்கியது.

'இவர் பேச்சைக் கேட்டுக்கினு, நான்கூட டாக்டரைத் தருமப் பிரபுன்னு நெனைச்சனே!' என்று தன்னையே கடிந்து கொண்டாள். 'இவருக்கு முனிசாமின்னு யாருன்னு தெரியாதோ! அன்னிக்கு அவரு ஊட்டு நாயை நம்ப நாய் கடிச்சிட்டப்போ மட்டும், நம்ப குடிசை தேடிவந்து, நாம்ப தான் நாய்க்குச் சொந்தக்காரர்னும் தெரிஞ்சி, பேர் சொல்லிக்கூப்பிட்டுச் சண்டை போட்டாரே, அன்னிக்கு எப்படித் தெரிஞ்சுதாம்? பார்க்கப்போனா கண்வலிக்கு மருந்து, நாம்ப யாருன்னு தெரியாமப் போனாலும் தருமத்துக்காகச் செய்யலாம். ஆபத்துக்கு உதவிய முனிசாமியோட சம்ஸாரத்துக்கு மருந்து கிடையாது; தீப்பிடிச்சு எரியறதை வேடிக்கை பார்த்துக்கினு இருந்தவருக்கு மருந்து; காரிலே இடம். மருவாதை!...என்ன இருந்தாலும் அவங்கவேறே, நம்ப வேறேதான். ஒட்டவச்சாலும் ஒட்டுமா? இது தெரிஞ்சுக்காமெ என்னை அனுப்பி வைச்சாரே, இவரைச் சொல்லணும்...'

நிம்மதியடைந்த மனத்தில் முனிசாமியின் ஞாபகம் வரவே பழையபடி கொதிப்பும் படபடப்பும் ஏற்பட்டன. அவளுக்குப் பேச்சுத் துணைக்குக் கூட ஆள் அகப்படவில்லை. பக்கத்துக் குடிசைக்காரர்கள் கூட வேலையின் நிமித்தம் வெளியே போய்விட்டார்கள். தூரத்தில் ஒருமரத்தடியில், நாலைந்து பையன்கள் கௌபீனதாரிகளாக விளையாடிக் கொண்டிருந்தார்கள். இரண்டு கைக்குழந்தைகள் கவனிப்பாரற்றுப் புழுதியில் புரண்டுகொண்டும், அழுது கொண்டும் இருந்தன.

முனிசாமி சாப்பிடவரும் நேரமாயிற்றென்று வெளியே வந்து எட்டிப் பார்த்தாள். முனிசாமி வரவில்லை. ஆனால் இவளைப் பார்த்த மாத்திரத்தில், வெறும் நாய் எங்கோ

இருந்து ஓட்டம் ஓட்டமாக ஓடிவந்தது. இவளுடைய மன நிலையோ எதைப் பார்த்தாலும் வெறுப்புக் கொள்ளத்தக்க நிலையில் இருந்தது. அதனால் நாய் அதிவேகமாகத் தன்னை நோக்கி ஓடி வருவதைப் பார்த்ததும், "என்னத்தைப் பார்த்து வாரியாம்? சீ, போ" என்று விரட்டினாள். நாய் போகவில்லை. அவளுக்குச் சிறிது நேரத்தில் மனம் மாறியதுபோலத் தோன்றியது. நாயை விரட்டாமலே வீட்டுக்குள்ளே போய்விட்டாள். நாயும் பின்தொடர்ந்து சென்று அவளுக்குப் பாக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டது.

சுமார் இருபது நிமிஷம் கழிந்திருக்கும். முனிசாமி வந்துவிட்டான். வந்ததும் வராததுமாக அவன் பார்வை வெறும் நாயின்மீதுதான் விழுந்தது. உடனே, 'சீ, கயிதை! போ வெளியே!' என்று ஒரு கல்லை எடுத்து எறிந்தான். நாய் அங்கெடுத்த ஓட்டத்தை எங்குபோய் நிறுத்தியதோ, தெரியாது.

## 6

இரவு மணி ஒன்பது. டாக்டரின் பங்களா இருந்த பகுதியில் அமைதி நிலவியிருந்தது. மழைகாலமானதால் ஒரே குளிர் வாடை அடித்துக்கொண்டிருந்தது. எல்லோரும் வாசல் கதவுகளையும், ஜன்னல் கதவுகளையும் பூட்டிக் கொண்டு அவரவர்களின் வீட்டுக்குள்ளே இருந்தார்கள். ஒரே நிசப்தம். ரேடியோவில் அது செய்தி நேரமானதால் ஒரு வீட்டில்கூட ரேடியோ சப்தம் கேட்கவில்லை. இரவு பத்து மணி வரையிலுமே ஒருவரும் ரேடியோவைத் திறக்க மாட்டார்கள். அப்புறம்தான் இந்துஸ்தானி சங்கீதம் வீதி எங்கும் முழங்கும். ஈரக்காற்றின் காரணமாக ஒருவரும் தெருவில் நடமாடவில்லை. டாக்டர் மட்டும் தற்செயலாக வெளியே வந்தார். அவரைப் பின்தொடர்ந்து ஜாதி நாயும் வந்தது. பெரிய உத்தியோகஸ்தனுக்குப் பின்னால் சின்ன உத்தியோகஸ்தன் வருவதைப்போல அர்த்த

மில்லாமல் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது ஜாதி நாய். டாக்டர் கம்பவுண்டை விட்டு, வெளியே வீதிக்கு வந்து விட்டார். நாய் மட்டும் உள்ளே எதையோ மோப்பம் பிடித்துக்கொண்டு, சத்தம் கேட்கும்படியாக மூச்சை உள்ளே இழுத்த வண்ணம் இங்கும் அங்கும் சுற்றிக் கொண்டே இருந்தது. அது தெருவுக்கு வரவில்லை.

டாக்டர் வெளியே வந்து ஒருமுறை நாலா பக்கமும் பார்த்தார். மறு நிமிஷத்தில்—

காம்பவுண்டுக்குள் இருக்கும் ஜாதி நாய் 'உர்ர்ர்' என்று உறுமியது. இருட்டில் அடையாளம் தெரியாமல் தம்மைப் பார்த்து மிரட்டுவதாக நினைத்துக்கொண்டு, நாயைப் பெயர் சொல்லி அழைத்தார். அந்த ஜாதி நாய் அப்புறமும் சும்மா இருக்கவில்லை. டாக்டர் தெருவில் நிற்கிறார் என்ற தைரியத்துடன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தது; குரைக்கும் சப்தம் வானைப் பிளந்தது. அப்பொழுது எதிர்த்திசையிலிருந்து கோஷம் கொடுத்துக்கொண்டே முன்னேறி வந்தது வெறும் நாய்; முனிசாமியின் முன்ஞனைய நாய். அன்று அதற்குச் சரியாகச் சாப்பாடு கிடைக்காததால், அதன் குரல் கிளம்பும்போது பல ஸ்வரங்களில் கிளம்பியது. முழு மூச்சுடன் இரண்டும் சொல் - யுத்தம் நடத்த ஆரம்பித்தன. வெறும் நாய் மீது டாக்டருக்கு வெகு நாளாகக் கோபம் என்பது இங்கு சொல்லாமலே தெரிந்து கொள்ளக் கூடிய செய்தியாகும். ஆனால் வெறும் நாய்க்கோ டாக்டர் மீது அதைவிட அதிகக் கோபம் என்று டாக்டருக்கும் தெரியாது; முனிசாமிக்கும் தெரியாது. இப்போது டாக்டரும் ஜாதி நாயும் சேர்ந்து தன்னை மிரட்டுவதனாலும், தனக்கு அன்று சாப்பாடு கிடைக்காத விசனத்தினாலும் அது உயிரை வெறுத்துக் குரைத்தது; டாக்டரை நோக்கிப் பாய்ந்தது. டாக்டர் கல்லை எடுக்கக் குனிந்தார். அந்த ஒரு க்ஷண நேரத்திற்குள் வெறும் நாய் புலிப்பாய்ச்சலாகப் பாய்ந்து டாக்டரின் முழங்காலுக்குக் கீழாகத் தன் பற்கள் அத்தனையும் பதியும்படி கடித்து இழுத்து

விட்டது. டாக்டரின் கூக்குரல், நாய்கள் குரைக்கும் சப் தத்தை அமுக்கிவிட்டது. வெறும் நாய் இதற்கெல்லாம் அஞ்சவில்லை. இரண்டாவது தடவையாகவும் கடிப்பதற் காக மிகவும் முயற்சி செய்தது. ஆனால் டாக்டர் கல்லால் அடிப்பது போல வெறுங்கையை வீச, வெறுங்கையைக் கண்டு விஷயம் தெரியாமல் வெறும் நாய் பயந்தோட, டாக்டரும் வாயு வேகத்தில் காம்பவுண்டுக்குள் பாய்ந்து கதவை மூடிக்கொண்டார்.

டாக்டர் வலிதாங்க முடியாமல் துடித்தார். தகுந்த சிகிச்சை செய்வதற்காக மற்றொரு டாக்டருக்குப் போன் பண்ணினார். மனைவியும், கோமளாவும் வெறும் நாயைச் சபித்துக்கொண்டும், முனிசாமியை வாய்க்கு வந்தபடி திட்டிக்கொண்டும் இருந்தனர். சமையல்காரன் வெகு வேக மாக ஓடிவந்து வீட்டு வாசலில் குரைத்துக் கொண்டு நிற்கும் நாயை விரட்டினான். வெறும் நாய் என்ன நினைத் ததோ, ஒன்றும் செய்யாமல் அப்பால் போய்விட்டது.

* * *

......முனிசாமி சாப்பிட்டுவிட்டான். அப்பொழுது தான் ஒரு வழியாகத் தன் சொல்லம்பை நிறுத்தியிருந்தாள் அவன் மனைவி. அவளுடைய சொல்லம்புகளைப் புடம் போட்டு எடுத்தால், கீழ்க்கண்ட வாசகங்கள் மிஞ்சும்.

“நீயும் ஒரு மனுஷன்தானா? (நீயும் என்பது முனி சாமியை) உனக்கு மானம், வெட்கம் இருக்கிறதா? டாக்ட ரிடம் நல்ல பிள்ளை என்று பெயர் வாங்கினால் சுவர்க்கமா கிடைக்கிறது? அவர் வீட்டில் ‘கிளுக்’ கென்று சத்தம் கேட்கு முன்னால் என்னவோ ஏதோ என்று ஏன் ஓடுகிறாய்? உனக்குக் கிடைத்தது என்ன? இளநீர் வியாபாரம் செய் யும்போது தினமும் ஒரு இளநீர் இனாமாகக் கொடுத்து வந்தாய்! வெள்ளரிக்காய் வியாபாரம் செய்யும்போது தின மும் ஒரு வெள்ளரிக்காய் கொடுத்தாய்! அவர்கள் வேண் டாம் வேண்டாம் என்று சொல்லியும் நீ ஓடி ஓடிக் கொண்டு போய்க் கொடுத்தாய். அப்புறம் வியாபாரத்துக்குக்

கையில் பணம் இல்லாமல், கூலி வேலைக்குப் போனாய். டாக்டர் வீட்டில் வேலை செய்தபோது காசு வாங்காமலே வந்தாய். டாக்டர் வைக்கோல் வாங்கும்போது, ஏழை வைக்கோல் வண்டிக்காரன் வாயில் மண்ணைப் போட்டுக் குறைந்த விலைக்கு டாக்டருக்கு வைக்கோல் வாங்கி அடுக்கினாய். இது மட்டுமா? அன்று தீப் பிடித்துக்கொண்ட போது ஏன் அப்படிப் பாய்ந்து பாய்ந்து வேலை செய்ய வேண்டும்? இவ்வளவுக்கும் ஒரு வாய்ப் பச்சைத் தண்ணீர் உண்டா? தாகத்துக்குச் சாப்பிடு என்று ஒரு தம்ளர் தண்ணீர் கொடுத்திருக்கிறார்களா என்று கேட்கிறேன்; 'நம்ப டாக்டர், தங்கமான டாக்டர். தர்மப் பிரபு' என்றெல்லாம், நாட்டுப்புறத்திலிருந்து வந்தவர்களிடம் பெருமையாகச் சொல்லிக்கொண்டு வந்தாய். எதற்கப்பா இதெல்லாம்? இல்லை, டாக்டராலே உனக்கு ஆகவேண்டியதென்ன? உன் பெண்டாட்டி கண்ணுக்குத்தான் அவர் மருந்து போடமாட்டேன் என்று சொல்லிவிட்டார். முகம் கொடுத்தாவது ஒரு வார்த்தை பேசட்டுமே!......

"என்னவோ ஒருநாள் இங்கே வந்து பயமுறுத்தினார். நாம் நாயைக் கட்டிப்போடவில்லை என்றால் சுட்டு விடுவதாகப் பயமுறுத்தினார். நீ உடனே ஓடிப்போய் நாயைக் கபாலிக்குக் கொடுத்துவிட்டு வந்தாய். அப்பொழுது பயப்பட்டதை என்னவோ ஏதோ என்று விட்டுவிட்டேன். நீ அத்துடன் நின்றாயோ? டாக்டர் கழுத்தை வெட்டிவிடுவார் என்று பயந்தாயோ என்னவோ, அவரிடம் நல்ல பிள்ளையாக நடக்க ஆரம்பித்தாய். அதையும் நான் பொருட்படுத்தவில்லை. அப்புறம் என்னடா என்றால் அவருக்கு வலியப்போய் அடிமையாகிவிட்டாய். ஒரு நாள் வந்து பயமுறுத்தியதற்கா இவ்வளவும்? நீயும் ஒரு ஆண் பிள்ளை தானா? அவர் என்ன செய்துவிடுவாராம்? நமக்கு ஆயிரம் இரண்டாயிரம் என்று சொத்து இருந்தாலாவது பயப்பட வேண்டும். சொத்துக்கு ஆபத்து வந்து விடுமே என்று பயப்படுவதில் நியாயம் உண்டு. நாமோ நாயினும் கேடாகப் பிழைக்கிறோம். நாம் ஏன் பயப்பட வேண்டும்?...இல்லை,

டாக்டருக்கு அடிமை செய்தால் நம் வயிறு நிறைகிறதா? உன் பெண்டாட்டிக்கு ஒரு வேளை மருந்துபோட மாட்டேன் என்று சொன்னதைக் கொஞ்சம் யோசித்துப் பார். என்ன இருந்தாலும் அவர் வேறு, நாம் வேறு என்று உனக்கு ஏன் தெரியாமல் போய்விட்டது? அவ்வளவுக்குப் புத்தி வேண்டாம், மனுஷன் என்று இருந்தால்? நீ..."

மேற்கொண்டும் அவள் சொல்லம்புகள் தொடுத்துக் கொண்டுதான் இருந்தாள். முனிசாமி அவமானம் தாங்காமல் குடிசையைவிட்டு வெளியே வந்தான். அப்பொழுது தான் டாக்டரைக் கடித்துவிட்ட நாய் அதிக வேகமாக முனிசாமியைப் பார்த்து ஓடிவந்தது. வந்து, வழக்கம் போலச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டும் வாலையாட்டிக் கொண்டும் இருந்தது. முனிசாமி 'சீ' என்று சொல்லி நாயை விரட்டப் பார்த்தான். அதற்குள் டாக்டர் வீட்டுச் சமையல்காரன் ஓடிவந்து, நாய் டாக்டரைக் கடித்துவிட்ட விவரத்தைச் சொல்லி என்னென்னவோ திட்டினன்.

"நான் என்ன செய்வேன்? நான் எப்பொழுதோ நாயைக் கபாலிக்குக் கொடுத்துவிட்டேன். அது விரட்டினுலும் போகாமல் இங்கேயே வந்துகொண்டிருக்கிறது" என்று பரிதாபமாகச் சொன்னான் முனிசாமி. பயம் அவன் இருதயத்தில் பேயறைந்ததுபோல் அறைந்து விட்டது. இதற்குள் முனிசாமியின் மனைவி வெளியே வந்தாள். சமையல்காரன் 'டாக்டர் தேடுவாரே' என்று திரும்பிப் போய்விட்டான். விஷயம் என்னவென்று கேட்டாள் மனைவி. முனிசாமி நடுங்கிக்கொண்டே சொன்னான். அவள் சொன்னாள்: "ஏன் இன்னும் பயந்து சாகிறே? நாயைப் பார்த்தாவது நமக்கு ஆண்மையும் மனுஷத்தனமும் வரட்டும். ஒருநாள் கல்லால் எரிந்து விரட்டியதற்கு அது பழிவாங்கிவிட்டது. நீயோ..."

தன் வயிற்றெரிச்சல் தீர நாய்க்கு அன்று சோறு போட்டாள் முனிசாமியின் மனைவி. முனிசாமி ஒன்றுமே பேசவில்லை. இரவு பத்தரை மணிக்கெல்லாம் படுத்துவிட்

டார்கள். நாயும் அந்தக் குடிசையிலேயே படுத்துக் கொண்டது. வெளியே மழை பெய்து கொண்டிருந்ததால், நாய் வெளியே போகவோ, நாயை வெளியே விரட்டவோ வசதி இல்லாமல் இருந்தது.

மனைவி நன்றாகத் தூங்கிவிட்டாள். முனிசாமிக்குத் தூக்கம் வரவில்லை. ஒருமுறை தன் மனைவியைப் பார்த்துக் கொண்டான். அப்புறம் தூங்கிக்கொண்டிருக்கும் நாயின் பக்கமாகப்போய் உட்கார்ந்து தடவிக்கொடுத்தான். 'நாய் என்றால் இதுவல்லவா நாய்!' என்று சொல்வது போல இருந்தது அவன் தடவிக் கொடுத்தது.

வெறும் நாய் ஆனந்த மிகுதியுடன் எழுந்து முனிசாமியின் புஜங்களின் மீது கால்களைப் போட்டு விளையாட ஆரம்பித்தது; மனுஷனுக்குத்தான் ஜாதிப் புத்தி போகுமென்றால் நாய்க்கும் போய்விடுமா?



# மீனு

கங்கை கொண்டான்—ஏதோ உலகத்தில் பத்தோடு பதினொன்ருக இருக்கும் ஒரு சிற்றூர்தான் கங்கை கொண்டான் என்னும் இந்தக் கிராமம். ஆனல் ஒவ்வொரு தடவையும் இந்தக் கிராமத்தின் வழிவாகப் பிரயாணம் செய்யும் போது, எனக்கு ஏதாவது ஒரு புது விஷயம் தோன்ருமல் போனதில்லை. 'பஸ்'ஸில் போகும்போது தூரத்தே தெரியும் இந்த ஊர்க் கோவிலின் தோற்றத்தைப் பார்த்ததுமே, 'உயர்ந்த சிகரக் கும்பம் தெரியு'தென்று மயிர்சிலிர்த்து மெய்மறந்த நந்தனைப்போல என் உள்ளத்தில் ஒரு குதூகலம் பிறக்கும். குதூகலத்தின் உடன் பிறப்பாக மனதில் பிறக்கும் வேதனை உணர்ச்சியும் கூட, குதூகலத்தின் மற்ருெரு சாயலைப்போல் உள்ளத்திற்குச் சாந்தி நிலவும் ஒரு பேசாச் சுகத்தை அளித்துவிட்டு, தூப கலசத்திலே எழுந்து குழையும் புகையைப் போல மன வெளியில் நளினமாக அசைந்து அசைந்து சுழலும்.

உள்ளத்திலே எழும் இந்த அதீத உணர்ச்சிகள் ஒரு பக்கம் இருக்கட்டும்...

இந்த ஊர் என் சொந்த ஊர் கூட அல்ல; சரித்திரப் பிரசித்திபெற்ற நிகழ்ச்சிகளுக்கோ, என் வாழ்க்கையில் நேரடியான சம்பந்தம் கொண்ட ஒரு கேளிக்கை வைபவத்துக்கோ கூட இது நிலைக்களனுக இருந்தது கிடையாது. ஆனல், ஒரு பானிப்பட்டைப் பற்றியோ, மஹாபலிபுரம், குருக்ஷேத்திரம் போன்ற ஊர்களைப் பற்றியோ நான் தெரிந்து கொண்டிருப்பதைவிட அதிகமாக இவ்வூரைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்கிறேன்; தெரிந்து கொள்ள விரும்புகிறேன்......

ஐந்தாறு வருஷ காலத்தில் என்னுடைய மனசுக்குப் பிடித்த பொழுதுபோக்கைப் போல நான் ஆராய்ந்து ஆராய்ந்து, மனதால் நேசித்து நேசித்து, இவ்வூரைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்குமாறு, என் முயற்றியின் ரசமான பகுதியைப்பற்றி இழுத்துக்கொள்ளும்படியாக இவ்வூரிடம் என்ன வசீகரம் அல்லது அற்புதம் இருக்கிறதென்று பிறர் நினைப்பது இயல்பு; நானும் கூடத்தான் நினைத்ததுண்டு. எனக்கு உற்சாகமோ உத்வேகமோ மட்டுக்கு மீறிப் பிறந்தபோது, இந்த ஊரிலுள்ள வசீகரம் என்ன, அற்புதம் என்ன என்று எனக்குப் புலப்படும். அந்த உற்சாகமும் உத்வேகமும் தணிந்தபின், அந்த இன்ப நினைவுகள் சாரமற்றுப் போய், கஷாயத்தைப் பிழிந்தெடுத்த பின் குப்பையில் கொட்டும் தேயிலையைப் போல 'சப்'பென்று மாறிவிடும். எனக்கே இப்படிச் சந்தேகாஸ்பதமான அனுபவத்தை அளிக்கும் ஒரு நிகழ்ச்சியை என் மனைவியிடம் பொருள் தொனிக்கும்படியாகச் சொல்லுவது எப்படி? சொன்னாலும் அவளுக்குப் புரிவது எப்படி? என் உணர்ச்சியின் சிகரத்திலே அனவரதமும் நடைபெற்றுவரும் இந்த அலகிலா விளையாட்டை, தனி உணர்ச்சியற்ற இயல்பான நிலையில், பரந்தவெளியிலே நிற்கும் அவள் எப்படிப்பார்க்க முடியும்? என்னுடைய சொல் என்ற சின்னஞ் சிறு படியின் மீதேறி ஏறிட்டு நோக்கினாலும் தெரியக் கூடியதா அது? நானும் ஒரு நாள் சொன்னேன்; அவளுக்கும் தெரியாமல்தான் போனது!

அப்போது கங்கைகொண்டானுக்குப் பக்கமாக மங்கம்மாள் சாலையில் பழைய பாலங்களை இடித்துப் புதிதாக இரண்டு பாலங்கள் கட்டிக் கொண்டிருந்தார்கள். அதை முன்னிட்டு என் தகப்பனார் மூன்று மாத காலம் அந்த ஊரிலேயே முகாம் போடவேண்டி ஏற்பட்டது. அப்போது அவர் எஞ்சினீயராக இருந்துவந்தார். அவருடைய சௌகரியத்துக்காக எங்கள் குடும்பமே கங்கை கொண்டானில் ஒரு வீட்டை வாடகைக்குப் பிடித்து அதில் குடியேறியது. அப்போது திருநெல்வேலியில் நான் படித்துக்கொண்டிருந்

தேன். பரீக்ஷைச் சமயமாக இருந்ததால் நான் ஏகதேச மாகக்கூடப் பன்னிரண்டு மைல் தூரம் வடக்கே தள்ளி யிருக்கும் கங்கைகொண்டானுக்குப் போய்வர இயலாதபடி இருந்தது. கடைசியில் பரீக்ஷையை எழுதிவிட்டு டிசம்பர் மாதத்தில் ஏதோ ஒரு தேதியில் கங்கைகொண்டானுக்குப் போனேன்.

நாங்கள் அங்கே குடியிருந்த வீடு மிக மிக வசதியாக இருந்தது. அந்த ஊரில் மின்சார வசதியில்லை. ஆகவே கண்ணைப் பறிக்கும் வெளிச்சமும், காதைச் செவிடாக்கும் ரேடியோ சப்தமும் இல்லாமல் இருந்த அமைதியான கிரா மியச் சூழ்நிலை எனக்குப் பிடித்துப்போய்விட்டது. பரீக்ஷை யினுல் அலுத்துச் சலித்து, பரீக்ஷை முடிந்தபின் இரண் டொரு நாட்கள் வரை நண்பர்களுடன் இரவும் பகலும் கும்மாளம் போட்டுவிட்டு வந்த நான் இந்தச் சுகமான அமைதியை விரும்பியவாறெல்லாம் அலுப்பு முறிக்கப் பயன் படுத்திக்கொண்டேன்.

வந்த இரண்டொரு நாட்கள் இருக்கும். மாலை நேரம் வந்ததும் மாடிக்குப் போனேன். மாடியறைகளுக்கு விதான மாக உள்ள மொட்டை மாடி அது. எனக்காக அங்கே ஒரு ஈஸிச்சேரையும், காலை நீட்டிக்கொள்ள ஒரு நாற்காலி யையும் கொண்டுபோய்ப் போட்டுக்கொண்டேன். வீட் டைச் சுற்றியும் இருக்கும் தென்னை மரங்களின் மேற்பகுதி கள் மாடியை உரசிக்கொண்டு வளர்ந்து மாடியளவில் வளர்ச்சியை நிறுத்திவிட்டன போலத்தோன்றின. தென்ன மரங்கள் சுகமாகக் காற்றிலாடிக் கொண்டிருக்கும். மெல் வானத்துச் செம்மையிலும் ரோகிணியுடன் உலாப் புறப் படும் நிலாப்பிறையின் சாந்தி நிலையிலும் மனம் லயித்தோ அல்லது நேராக மேற்கே உள்ள குற்ருலத்திலிருந்து திரி கூடமலையின் வசந்தக் காற்று, காலம்மாறித் திசையும் புரண்டு அடிப்பதாகப் பாவித்தோ இன்பகரமாகப் பொழுது போக்கத் தக்க அபூர்வ விடுதியாக இருந்தது அந்த வீடு; என்னுடைய இந்தக் கற்பனு ரதத்தைப் பிணித்து இழுக்கும் கயிறுகளைப் போல இருந்தாற் போலி ருந்து திடீரென்று மேற்கேயிருந்து யாரோ பாடும்

குரல் கேட்டது. இருக்க இருக்கத் தெளிவாகவே கேட்க ஆரம்பித்தது. பாடுவது பெண்குரல். மோஹன ராகத்தைப் பாடிக்கொண்டிருக்கிருள் என்பதும் தெளிவாகத் தெரிந்தது. திடீரென்று எழுந்துபோய் மேற்கே எட்டிப் பார்த்தேன். மேற்கே ஒரு தெரு; அதற்கும் மேற்கே உள்ள ஒரு வீட்டிலிருந்துதான் யாரே ஒரு பெண் பாடிக்கொண்டிருந்தாள். அந்த மேல் வரிசை வீடுகளை அநேகமாகத் தென்னை மரங்கள் மறைத்துக் கொண்டிருந்தன. நேரமோ ஒளி மயங்கும் அந்தி மாலை. இன்ன வீடு என்று நிச்சயமாகத் தெரிந்து கொள்ளாமல் திரும்பி வந்து உட்கார்ந்தேன். மோஹன ராகம்......

ஏதோ ஓர் அரண்மனையில் சிறிது நேரத்தில் நடக்கப் போகும் மங்கள காரியத்தை எக்காளம் ஊதி அறிவிப்பது மாதிரி, உல்லாசத்துக்கும், அங்குரார்ப்பணக் கோலாகலத்துக்கும் அடையாளம்போல களியாட்டமாடும் அந்த மோஹன ராகத்தை அன்று, அந்த மாலை நேரத்தில் அனுபவித்த அனுபவமே தனி. சிறிதுநேரம் பொன்னூசலாடி மகிழ்வது, சிறிது நேரம் யாரையோ மறைமுகமாகக் கேலி செய்துவிட்டு முகத்தைத் திருப்புவது...இப்படி எல்லாம் எண்ணற்ற சித்திரங்களை வானில் பறந்துவரும் நாத இழைகளால் பின்னிப் பின்னிப் பார்த்து மகிழும்போது எனக்கே ஒரு சமயம் சிரிப்பு வந்துவிட்டது!

அபூர்வமான தன் இசை ஞானத்தைக் காட்ட அந்தப் பெண் அந்த ஒரு ராகத்தை ஆலாபனை செய்ததே போதும். ஆனால் இயற்கை தன் வனப்பைக் காட்டத் தாமரைப்பூ ஒன்று மட்டுமே போதும் என்று திருப்தி அடைந்தது உண்டா? ஏதேதோ பாடினாள். கேட்டேன். பாட்டு முடிந்தது. நேரமாய்விட்டதால் நானும் மாடியை விட்டுக் கீழே இறங்கி வந்தேன்......

* * *

இரவு எட்டு மணிகூட இராது. ஆனாலும் வீட்டிலே எல்லோரும் சாப்பிடுவதற்கு ஆயத்தமாக இருந்தார்கள். முதலில் அப்பாவும் தங்கை லக்ஷ்மியும் சாப்பிட உட்கார்ந்

தார்கள். அவர்களுக்கு எதிர்த்தாற்போல் நான் உட்கார்ந்தேன். வாய்க்குள்ளாக அந்த மோஹன ராகத்தை முணுமுணுத்துக்கொண்டே இருந்தேன். லக்ஷ்மி கேட்ட ஏதோ ஒரு கேள்விக்குப் பதில் சொல்லும்போதுதான் வாயின் முணுமுணுப்பு நின்றது. பதார்த்தங்களைக் கொண்டு வந்து அம்மா பரிமாறிக்கொண்டிருக்கும்போது, "மேற்கே இருந்து யாரோ பாடும் குரல் கேட்டது. ஸ்வர சுத்தமாக இந்த மாதிரிப் பாடக் கூடியவர்கள் இந்தப் பட்டிக்காட்டில்கூட இருக்கிறார்களே" ஒன்று சொன்னேன்.

"அதென்ன? பட்டணத்திலேதான் இருப்பார்களா கெட்டிக்காரர்களெல்லாம்" என்று மேலோட்டமாகப் பதில் சொல்லிவிட்டு, விஷயத்தை அப்படியே விட்டுவிட்டார் அப்பா. அந்தக் கேள்வியை நான் கேட்கும்போது எனக்கிருந்த பக்தி சிரத்தையும், ஈடுபாடும், ஆவலும் அவருக்கு எங்கே தெரியும்? ஆனால், 'பளிச்' சென்று லக்ஷ்மி, "நான் சொல்லட்டுமா? மீனுதான் தினமும் பாடுவாள்" என்றாள்.

"மீனுவா? அது யார்?......" என்று அக்கரையில்லாதவனைப்போல் சிரித்துக்கொண்டே கேட்டேன். அதற்குள் உள்ளேயிருந்து வந்த அம்மா, "அவ ஒரு குருட்டுப் பொண்ணு. இரவும் பகலும் பாட்டு பாட்டு, ஓரே பாட்டுத்தான்" என்று சொன்னதும் எனக்கு இதயத்திலே உள்ள ஏதோ ஒரு ரத்த நாளம் அறுந்து விழுந்துவிட்டது போல இருந்தது.

"குருட்டுப் பொண்ணு?......"

"கண்ணு ரெண்டும் தெரியாதண்ணு......பாவம்!" —இது லக்ஷ்மி!

"சாப்பிடுங்கோ. சாப்புடும்போதே என்ன ஓயாதே பேச்சு" என்றார் அப்பா. லக்ஷ்மி தலைகுனிந்து சாப்பிட ஆரம்பித்து விட்டாள். அந்தக் குருட்டுப் பெண்ணின் விருத்தாந்தத்தை அறிய வேண்டுமென்று ஆவல் பிறந்தது. அப்பா சாப்பிட்டுவிட்டுப் படுக்கைக்குப் போன பிறகு

அம்மாவிடம் கேட்கலாம் என்று தீர்மானித்துக்கொண்டு சாப்பிட்டேன். மாடியில் பாட்டைக் கேட்டபோதும், கேட்டுவிட்டு இறங்கி வந்தபோதும் நான் கற்பனை பண்ணிப் பார்த்த அந்த இசைச் செல்வியும், இப்போது இவர்களால் குருட்டுப் பெண் என்று சொல்லப் படுபவளும்...அதிசயமாகத்தான் இருந்தது!

நான் மனமிழந்து ஈடுபடும் ஒரு ராகம். அதற்கும் மேலாக, பாடியவள் ஒரு பெண். இந்த அடிப்படையில் என் உள்ளத்தில் பிறந்த உல்லாசத்தையும், விளையாட்டை யும் காலிடறி விட்டு விட்டு, அந்த ஸ்தானத்தில் அனுதாப உணர்ச்சி கண்ணீரும் கம்பலையுமாய் விரித்த தலையுடன் வந்து அமர்ந்துகொண்டு விட்டது. ஏதோ சாதாரண மாக ஒரு பெண் என்றால், அவள் யாரோ நான் யாரோ என்று கதை அவ்வளவில் முடிந்திருக்கும். ஆனால் அவள் குருடாக இருந்ததனால் அவளைப் பற்றிய விசாரிப்பும், அனுதாபமும் நீண்டு நீண்டு நான் இன்னும் பார்த்திராத அந்தப் பெண்ணுடன் எனக்கு எப்படியோ ஒரு சம்பந் தத்தை ஏற்படுத்திவிட்டன.

மாடியறையில் கட்டிலில் படுக்கையை விரித்துப் படுத் தேன். மூலையில் மங்கலான மண்ணெண்ணெய் லாந்தர் தொங்கிக் கொண்டிருந்தது. மேற்குப் புறத்திலிருந்த ஜன்னல்களை எல்லாம் திறந்து வைத்துவிட்டுத் தலையணை யில் சாய்ந்துகொண்டேன். பக்கத்திலே ஸ்டூலில் அடுக்கி யிருந்த புத்தகங்களில் ஒன்றை எடுத்துப் புரட்டிக்கொண் டிருப்போமா என ஓர் எண்ணம் விழுந்தது. ஆனால், மேற்கே வானம் இருளடர்ந்திருந்ததும், தூரத்தே மேற்குத் தொடர்ச்சி மலையில் நெருப்பு எரிவது குங்குமப் புள்ளி களைப் போலத் தென்பட்டதும் அறையிலிருந்த மங்கலான விளக்கு வெளிச்சமும் சேர்ந்து மனதில் உள்ள ஆழங்காண முடியாத உணர்ச்சியை ஒன்றுக்குப் பத்தாகப் பெருக்கிக் காட்டின. நகரத்துச் சந்தடியினின்று முற்றிலும் வேறு பட்டிருக்கும் இந்தக் கிராமத்தின் அமைதியான சூழ்நிலை யில் இதைப்போன்ற ஒரு முன்னிரவைப் படுக்கையில்

படுத்துக்கொண்டே அனுபவத்தில் தட்டுப்படும் ஒரு சுகம் அன்று எனக்கு ஏற்படவில்லை. அம்மா எப்போது பாலை எடுத்துக்கொண்டு வருவாள், மீனுவின் பூர்வோத்திரங்களை எப்போது கேட்போம் என்ற பரபரப்பில் சலனமற்றுப் படுத்துக் கிடந்தேன்.

அம்மா வந்தாள். வந்து ஒரு மணி நேரம் வரைக்கும் மீனுவைப் பற்றிதான் சொல்லிக் கொண்டிருந்தாள். ஒரு மாத காலத்துள்ளாக ஒரு புதிய ஊரில், புதிய ஆட்களைப் பற்றிய விருத்தாந்தங்களை இவ்வளவு தெள்ளத் தெளிவாக எப்படித்தான் பெண்கள் விசாரித்துத் தெரிந்து கொள்ளு கிறார்கள் என்று நான் அடைந்த வியப்பை, சிரித்துக் கொண்டே அம்மாவிடம் சொல்லியும் விட்டேன். இந்தக் குதூகலமான முற்றுப் புள்ளியுடன் அம்மா பால் கொண்டு வந்த டம்ளரை எடுத்துக்கொண்டு போய்விட்டாள். மனத்திலே மிகமிக ஆழமான உணர்ச்சி, இயல்பான மனித சிந்தனையின் போக்குக்கு எதிரோட்டமாக மூர்த்தண்யமாய் நகர்ந்துகொண்டு இருந்தாலும், வெளிக்கு ஒன்றுமில்லாததுபோலக் காட்டிக்கொள்ள வசதி செய்து கொடுக்கும் ஹாஸ்ய பாவம், விளக்கை அப்புறப்படுத்தியதும் கண்ணாடியின் பிரதிபலிப்பு மறைந்து விடுவதுபோல, இரண்டாவது ஆள் மறைந்ததும் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

படுத்தேன். இனித் தன்னையறியாமல் உறக்கம் தழுவும் வரைக்கும் சிந்தனைகளுக்கு என்ன பஞ்சம்?

பெற்றோர்க்கு ஒரே பெண்ணாகப் பிறந்து, தாயாரை இழந்து, ஏராளமான சொத்து சுகங்களிலிருந்தும் வினைத் தெரியாத நாளிலேயே வைசூரியால் கண்களையும் இழந்து பிராயம் இருபதையும் கழித்து, எங்கோ இருந்துவந்த எவனோ ஒருவனுடைய அனுதாபத்தையும், சங்கோஜத்தினால் ரகசியமாக வடிக்கும் கண்ணீரையும் தனக்கு உடமைகளாக்கக் காத்திருந்த பெண் மீனு என்ற இந்தச் செய்திகள் ஏதோ ஒரு சோகரசம் ததும்பும் ராகத்தின் ஸ்வரக்கிரமம் போல உருப்பெற்று மனக் கற்பனையின் மூலை

அரங்குகளிலெல்லாம் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. அந்த ராகத்தின் கடைசி இழையாக இருந்தது காலை ஒன்பது மணி வரையிலும் கண்ணயர்ந்து கிடந்த என் நித்திரை.

ஃ ஃ ஃ

அவள் இசையில்தான் உயிர் வாழ்வதன் அர்த்தத்தைக் கண்டவள். நான் இசையில் என் மனப் பண்பை உயர்த்தும் புனிதமான ஓர் இன்பத்தை உணர்ந்தவன்.

அவள் அநியாயமாகக் கண்ணை இழந்த பெண்; நானோ அனுதாப உணர்ச்சி நிரம்பியவன்.

சமூகப் பாகுபாட்டின்படி அவளும் நானும் ஒரே ஜாதியினர்......

இந்தச் சம்பந்தங்கள் போதாதா, மீனாவை பார்க்கப் புறப்படுவதற்கு?|

போனேன். போய் மீனாவின் தகப்பனாரிடம் என்னை அறிமுகப் படுத்திக்கொண்டு, அவர் உட்கார்ந்துகொண்டிருந்த திண்ணையில் போய் உட்கார்ந்தேன். ஓர் எஞ்சினீயரின் பிள்ளையோடு பேசவேண்டிய மரியாதையுடன் பேசிவிட்டு, தம்மோடு என்னையும் வெற்றிலை போடச் சொன்னார். அந்தச் சந்தர்ப்பத்தில் வந்த அவர் வீட்டுப் பண்ணைக்காரனுடன் அவரும் சந்தர்ப்பவசமாக எழுந்து போனார். நான் வெற்றிலை போட்டு முடித்ததும் என் வீட்டுக்குப் புறப்படுவது போல அவரிடம் காட்டிக் கொண்டேன். அவர் போய்விட்டார். அப்புறம்...

ஏதோ இரண்டொரு நிமிஷங்கள் தாமதித்து, தயங்கி வீட்டுக்குள்ளே போனேன். அவரும் நானும் பேசிக் கொண்டிருக்குபோது சுவருக்கு மறைவில் நின்று கேட்டுக் கொண்டிருந்த மீனாவுக்கு என்னை நான் அறிமுகப் படுத்தவேண்டிய அவசியம் நேரவில்லை. என் வருகையை அறிவித்தது ஒரே ஒரு பொய் - இருமல்!

"யாரது?" ஆண் மகனைப்போன்ற மிடுக்குடன் ஏறிட்டுப் பார்த்துக்கொண்டு கேட்டாள் மீனா.

"என்ன?..." இதைத் தவிர நான் என்ன சொல்லி என்னை யாரென்று காட்டிக்கொள்ள முடியும்?

என் குரல் தழுதழுத்தது. அவளோ மிகவும் கம்பீர மாகவும் அழுத்தம் திருத்தமாகவும் "லக்ஷ்மியின் அண்ணுவா நீங்கள்?" என்று கேட்டாள்!

"ஆமாம்..."

அவள் உட்கார்ந்திருந்த பாயின் நுனியில் உட்கார்ந் தேன். அனுதாபத்தினுல் மனமிழந்த எனக்கு இந்தத் துணிவு பிறந்ததில் அதிசயமில்லை. அதைப்போல உல கத்திலே பெண்கள் சம்பிரதாயம் என்று அறியாமலே கொள்ளும் நாணம் வெட்கங்களை உலகத்தையே காணுத மீனு நடித்துக் காட்டாததிலும் அதிசயமில்லை. என்ன சொல்லுவது?...எதைப்பற்றிப் பேசுவது?...

சிறிது நேரம் அவளையே பார்த்துக்கொண்டிருந்தேன். இருபது வயது நிரம்பிய அவள், கண் கெட்ட காரணத் தாலோ என்னவோ குன்றிக் குறுகிப்போன உடல் கட்டுடன் இருந்தாள்! அவளுடைய செம்மேனிக்குச் சோபையும் துலாம்பரமும் அளித்தது அவள் உடுத்தியிருந்த பச்சை நிறப்பட்டு. பெரியம்மை விளையாடிய சுவடுகளைக் காட்டும் தழும்புகள் முகத்தில் பதிந்து கிடந்தாலும், அங்கே ஒரு பொலிவும், மிடுக்கும் கொப்பளித்துக் கொண்டிருந்தன.

"இங்கே நேற்று பாடிக்கொண்டிருந்தது யார்?" என்று கேட்டேன். தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள இருவரையும் பிணைத்து நான் போட்ட முதல் முடிச்சு இது.

"நான்தான்." இப்போது குரல் தாழ்ந்திருந்தாலும் சங்கோஜத்தின் சாயல் தென்படவில்லை.

"மோஹன ராகம் அற்புதமாக இருந்தது."—இதற்கு மௌனமாக இருந்தாள்.

"இப்போதும் பாடம் நடக்கிறதோ?"

"இல்லை. பாட்டு வாத்தியார் ஊருக்குப் போய்விட் டார்."

"யார் அந்த வாத்தியார்? எந்த ஊர்க்காரரர்?"

"குருமலை ராமையாப் புலவர்."

பிறகும் இதைப் போன்று இரண்டோர் அர்த்தமற்ற விசாரிப்புகள்! கேட்ட கேள்விகளுக்கெல்லாம் உடனுக்குடன் பதில் வந்தது. அவ்வளவுடன் போதும் என்று எழுந்து வந்துவிட்டேன்.

மீனுவைப் பார்க்காமலேயே அவள்மீது அனுதாபம் கொண்ட என் உள்ளம், இசை ஞானம், அழகு, நல்ல சுபாவம் இத்தனையும் கொண்டவள் மீனு என்பதை அறிந்த நிலையில் அவளுக்காக எவ்வளவோ மறுகியது. மறுநாளும், அதற்குப் பிறகு பல நாட்களிலும் அவளைக் காணும் ஒவ்வொரு தடவையும் அவளிடத்தில் மட்டற்ற இரக்கத்தையும் அனுதாபத்தையும் காட்டத் தூண்டியது உள்ளம். இந்த உலகத்தில் என் அனுதாபத்துக்கு ஆளாக வந்த முதல் ஜீவனாக மாறிவிட்டாள் மீனு. இத்தனை நாட்களில் ஒரு நாளாவது நான் அவளைப் பாடச் சொன்னது கிடையாது. அப்படி அவளைக் கேட்டுக் கொள்ளுவதற்கு என் மனம் ஒப்பவில்லை.

முதல் நாள் சந்திப்பினுடைய சாயல்தான் எல்லாச் சந்திப்புகளிலும் பிரதிபலித்தது. எங்கள் உறவின் தொடக்கமும் முடிவும், சில பரிவு நிறைந்த கேள்விகள் அவற்றிற்கேற்ற விடைகள்- இந்த இரண்டின் எல்லைக்குள்ளேயே வட்டமிட்டன. தினந்தோறும் சூரியன் உதிக்கிற காட்சி நடைமுறையாகப் போனாலும், ஏதாவது ஒருநாளில் சூரியோதயக் காட்சி மிகவும் அதிகமாக மனசைப் பற்றுமாறு அமைந்து விடுவதுபோல, ஒரு நாள் மீனுவுடன் நான் பேசிக்கொண்டிருந்தபோது ஒரு ருசிகரமான சம்பவம் நடந்தது.

அன்று வீட்டில் எவருமில்லை. பிற்பகல் ஒரு மணியிருக்கும். வேலையாள் இல்லாததால் மீனுவே தடவித் தடவி வீட்டுக்குள்ளிருந்து எடுத்துக்கொண்டு வந்த வெற்றிலையைப் போட்டுக்கொண்டு இருந்தேன். வெற்றிலையைப் போட்டு முடித்த மீனுவின் தந்தை, உண்ட மயக்கத்தினால் மாடிக்கு உறங்கப் போய்விட்டார். அந்த வீட்டில் சர்வ சகஜமாகப் பழகும் உறவினரைப் போலக்

கருதித்தான் என்னிடம் சொல்லிக் கொள்ளாமலேயே அவர் மாடிக்குப் போனுர் போலிருக்கிறது!

அந்தச் சந்தர்ப்பத்தில் தினமும் மீனு வீட்டுக்கு வழக்க மாக வரும் சுமார் ஏழெட்டு வயதுள்ள ஒரு பக்கத்து வீட்டுச் சிறுமி வெயிலோடு வெயிலாய் இளைத்துக் கொண்டு ஓடி வந்தாள். வந்து, பின்னல் கையைக் கட்டிய வண்ணம் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க நின்றுகொண்டு, வேண்டு மென்றே ஒன்றும் பேசாமல் ஒரு கணம் மௌனமாக இருந் தாள்! வழக்கம்போல அவளோடு விளையாடும் நான் 'அவள் தான் முதலில் பேசவேண்டும்' என்று வீம்பு பண்ணிப் பேசா மல் இருந்தேன். அவளுக்குப் பொறுமை இல்லை உடனே பளிச்சென்று பின்னல் கட்டிய கையை நெகிழ்த்தி என்னிடம் ஒரு மலர்ப்பந்தை நீட்டினுள்.

"ஏது? எங்கே கிடைத்தது இந்தப் பூப்பந்து?"

"கல்யாண வீட்டில்."

"யாருக்குக் கல்யாணம், ஸரோ?" மணமக்கள் பெய ரும், குலம் கோத்திரங்களும் அவளுக்கு எங்கே தெரியும்? தெரியாததினுல்,

"யாருக்கோ?" என்ருள்.

நானும் மீனுவும் சிரித்துவிட்டோம். ஸரோஜா மீனு வின் அருகில்போய் உட்கார்ந்தாள். நான் சும்மாயிராமல் "உனக்குத்தான் கல்யாணம்னு எல்லோரும் சொல்ருு! நீ யாருக்கோன்னு ஏண்டி பொய் சொல்றே!" என்றேன்.

கல்யாணம் என்றதும், கருடனைக் கண்ட பாம்பு படத் தைக் கீழே போடுவதைப் போல, மீனுவின் முதுகில் சாய்ந்து தன் முகத்தை மறைத்துக் கொண்டாள் ஸரோ!

"குழந்தைகளுடைய மனசே தனி. அவர்களுக்குள்ள அறிவு பெரியவர்களுக்கு இல்லாமல் போய்விட்டது. ஒரு நல்ல பூப்பந்துகிடைத்ததும், அதை மற்றவர்களுக்குக் கொடுத்துவிடுவதன் மூலம், தனக்குப் பூப்பந்து கிடைத்த சந்தோஷத்தை அனுபவிக்கிறது குழந்தையின் மனசு. இந்த மனப்பாங்கு பெரியவர்களுக்கு இல்லையே!" நான் தத்துவம் விரித்துக்கொண்டு போனேன். மலர்ப்பந்தைக் கண்களிலும்

மூக்கிலும் வைத்து வாசத்தை நுகர்ந்து கொண்டிருந்தேன். அப்போது மீனு மிகவும் மிருதுவான குரலில் தயங்கித் தயங்கி,

"பெரியவர்களைச் சொல்லுவானேன்? குழந்தை மனசு உங்களுக்கும்தான் எங்கே இருக்கிறது?" என்று சொல்லி நாணத்துடன் பலவந்தமாகவும் சிரித்தாள். இந்த நாணத்தையும் பாவனையையும் மீனுவிடத்தில் முதல் முதலாக அப்போதுதான் கண்டேன்.

"சொல்லுவது ஒன்றும் எனக்குப் புரியவில்லையே!"

என் புரியாத சந்தேகத்தை அவளிடம் எத்தனையோ முறை கேட்டும்கூட, அவள் அதை விளக்குவதற்கு மறுத்து விட்டாள். அன்றைய அனுபவம் விசித்திரமாகத்தான் இருந்தது. எப்போதும் வீடு திரும்பும்போது ஏதாவது ஒரு காரணத்தை வைத்து, மீனுவின் அந்த நிலையை எண்ணி வருத்தத்துடன் வருவேன். அவளுக்கு இதமாக ஏதாவது சொல்லி, அவளிடம் என் மன இரக்கத்தை வெளிப்படையாகக் கட்டிவிட்டுத் திரும்புவது வழக்கம். ஆனால், அன்றோ அவளும் நானும் சிநேகிதர்களைப் போல விளையாடி விட்டோம்! என் அனுதாப உணர்ச்சியின் கன்னத்தில் அடித்த மாதிரி, கண்ணிழந்தாலும் நானும் நீயும் சமம்தான் என்று காட்டுவதைப் போல, ஒரு புதிரை விளையாட்டாகப் போட்டு விட்டாள் மீனு. அப்புறம் குழந்தையைப் போலப் பிடிவாதமும் பிடித்தாள்.

அதற்குப் பிறகு நான் கங்கைகொண்டானில் தங்கியிருந்த மீதி விடுமுறை நாட்களிலும் இந்த விளையாட்டு வாழ்க்கைதான். ஒருநாள் நானே நினைத்துக்கொண்டேன். 'என்ன பைத்தியக்காரத்தனமடா இது? குருடி என்றால் தினம் தினம் துக்கப்பட்டுக்கொண்டா இருப்பாள்? தான் குருடி என்பதை அவள் மறந்தே எத்தனை வருஷங்கள் ஆயிற்றோ? அவளுக்கு நாள்தோறும் அனுதாபம்தெரிவித்துக் கொண்டிருப்பதால் அவளுக்கு வருத்தம் ஏற்படுமா? இல்லை, சந்தோஷம் ஏற்படுமா?'

இந்தத் தெளிவு பிறந்தது. அன்று முதல் வெளிப்படை யாகக் காட்டிக்கொள்ளாவிட்டாலும், உள்ளத்துக்குள்ளே அவளுக்காகப் பச்சாத்தாபப் படுவதை மட்டும் என்னுல் நிறுத்த முடியவில்லை. அது ஒரு பக்கம் இருக் கட்டும். அவள் போட்ட அந்தப் புதிர்...? அதுதான் புரிய வில்லை! புரிந்துகொள்ளாமல்தான் விடுமுறை முடிந்து திருநெல்வேலிக்குப் புறப்பட்டேன்.

* * *

அப்புறம் எத்தனையோ சந்தர்ப்பா சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. திடீர் திடீர் என்று ஊர்விட்டு ஊர் பெயர்ந்து போகவும், வாழ்க்கை நிலையில் பல மாறுதல்கள் செய்யவும் நேரிட்டன. அப்பா கங்கைகொண்டானில் வேலை முடிந்து எங்கெங்கோ பல ஊர்களுக்கும் போய்வந்து விட்டார். இரண்டு வருஷகால அவகாசத்தில், நான் திரும்பவும் கங்கைகொண்டானுக்குப் போவதற்கு வழி செய்யக்கூடிய ஒரு சந்தர்ப்பமும் ஏற்படவில்லை; அசந்தர்ப்பமும் ஏற்பட வில்லை.

கங்கைகொண்டானில் விடுமுறை நாட்களைக் கழித்த அந்த இடைக்காலம் அநேகமாக மறந்தே போய்விட்டது. அங்கே நடந்த நிகழ்ச்சிகள், அக்கறையில்லாமல் எங்கோ ஒரு பார்பர் ஷாப்பில் பார்த்த சித்திரங்களின் நினைவைப் போல மனசில் பதியாமல் அழிந்து மறைந்தன. உலகத்தில் புதிது புதிதாகப் பல வாழ்க்கைத் துறைகளிலும் அடி யெடுத்து வைத்துப் பழைய துறைகளைக் கழித்துத் தள்ளி விட்டு மேலே மேலே போய்க்கொண்டிருக்கும் வாலிபத் தின் வளர் பருவத்தில், அனுபவம் முத்திரை போட்டிருந் தாலும், அந்த முத்திரையைப் பார்த்து விமரிசனம் செய்து ஆராயும் நிச்சலனமான புத்தி இருப்பது சாத்தியமா? சென்ற நாட்களை நினைவு கூர்ந்து மகிழவோ, ஏங்கவோ செய்யும் விருத்தாப்பிய இயல்பு எனக்கு அதற்குள் எங்கே கிட்டும்?

இப்போது மதுரையில் இருக்கிறோம். எனக்கு உத்தி யோகமாகி இருக்கிறது. ஒவ்வொருவராக மீனுவைப்

போன்ற பல பெண்களை எனக்குக் கல்யாணம் செய்ய நிச்சயித்து, நிச்சயித்து, அப்புறம் பல காரணங்களாலும் கல்யாணம் நடக்காமல் நின்று போயிருக்கிறது. இப்படிப் பல பெண்களின் முகங்களையும் தாம்பத்ய நோக்குடன் பார்த்துப் பார்த்துப் பழகிய எனக்கு சாதாரணமாக அறி முகம் மாத்திரமே ஆன ஒரு பெண், மூலவர் சிலையைப் போல் இதயத்தின் பிரதான ஸ்தானத்தில் நிலைத்திருக்க வேண்டுமென்பது இயற்கையும் இல்லை; அவசியமும் இல்லை.

இப்படிப்பட்ட சந்தர்ப்பம்—இந்தச் சந்தர்ப்பத்தை, இந்தச் சந்தர்ப்பத்திலிருந்த மனநிலையை மாற்றி, பழைய படியும் மீண்டும் என் மனதில் குடிபுகுவதற்குரிய ஒரு சந்தர்ப் பம் என் கல்யாணத்தின்போது எப்படியோ ஏற்பட்டு விட்டதுதான் அதிசயம்!

* * *

நலுங்கு முடிந்ததும் பந்தலின் ஒரு மூலையில் உட்கார்ந் திருந்த நண்பர்களின் பக்கத்தில் போய் உட்கார்ந்தேன். கல்யாணப் பந்தலின் கீழே நையாண்டிக்கும் பரிகாசத்துக் கும் பஞ்சமா? உட்காராமல் இருக்கும் போதே தமாஷ் பண்ண ஆரம்பித்தவர்கள் நான் எழுந்து புறப்படும் வரைக் கும் நிறுத்தவில்லை.

பக்கத்திலிருந்த தட்டிலிருந்து வெற்றிலையை எடுத்துப் போட்டுக் கொண்டிருந்தேன். அந்தச் சந்தர்ப்பத்தில் அங்கே வந்து உட்கார்ந்த என் உறவினரொருவர் தம் கையிலே ஒரு பூப்பந்தை வைத்திருந்தார். உட்கார்ந்திருந்த ஒரு நண்பர், "வேய், உமக்கு பூப்பந்து என்ன கேட்குது? மாப்பிள்ளையா என்ன? கையிலே பூப்பந்தை வைத்துக் கொண்டே விடிஞ்சது முதல் இங்கேயும் அங்கேயும் போய்க் கொண்டிருக்கிறீர்" என்றார்.

"மாப்பிளையும் நம்மைப் போல மனுஷன்தானடா!" என்றார் அவர்.

அவர் சொல்லி வாய் மூடுமுன் அவர் கையிலிருந்து பந்தைப் பிடுங்கி என் கையில் கொடுத்துவிட்டார் நண்பர். அவரோ, "மாப்பிள்ளை கேட்டால் கொடுத்து விட்டுப் போகிறேன். உனக்கு என்னடா நடுவிலே தாளுபதித் தனம்?" என்றார்.

இப்படியே விளையாட்டும் வேடிக்கையுமாகக் குதூகலித்துக் கொண்டிருந்தோம்.

சிறிதுநேரம் சென்றது. நான் வீட்டுக்குள் எழுந்து போக வேண்டிய ஏதோ அவசியம் ஏற்பட்டது.

எழுந்தேன். கையிலே வைத்திருந்த பூப்பந்துடன் தான் எழுந்தேன். நான் கொஞ்சம் அப்பால் நகர்ந்ததும் எனக்கு மலர்ப்பந்தை வாங்கித் தந்த நண்பர் பக்கத்திலிருந்த மற்றொருவரிடம், "அவன் யாருக்காகப் பூப்பந்தைக் கொண்டு போகிறான் தெரியுமா? சொல்லும் பார்ப்போம்" என்று ரகசியமாகச் சொன்னதும், பதிலுக்கு அவர் உரத்த குரலில், "யானை பார்க்க வெள்ளெழுத்தா?" என்று சிரித்துக்கொண்டே சொன்னதும் என் காதில் விழுந்தன.

"மனசுக்குப் பிடித்த அழகான சாமான்களை மனசுக்குப் பிடித்தவர்களுக்குக் கொடுக்காமல் இருக்கமுடியுமா? கொடுக்காமல் இருந்தால் அந்த அழகை ரசித்ததாகத்தான் ஆகுமா?"

—இது முதல் நண்பர்! திரும்பிப் பார்த்து நாக்கைக் கடித்துக் கொண்டே ஒரு பொய் அதட்டுப் போட்டுவிட்டு வீட்டுக்குள்ளே போய் விட்டேன்.

அவர்கள் பேசியதிலும் ஒரு அர்த்தம் இருந்தது. எதிர் பாராத விதமாக, அந்த மலர்ப்பந்தை "அவ"ளுக்குக் கொடுக்க வேண்டுமென்று என் மனம் உண்மையிலேயே மிகவும் ஆசைப்பட்டது! சயனக்கிருஹத்தில் அதிர்ஷ்டவசமாகப் பேசுவதற்கும் தைரியம் பிறந்தால், "இது கல்யாண வீட்டில் கொடுத்தது!" என்று முன்பு ஸரோ சொன்னது போல அவளிடம் சொல்லக்கூட ஆசைதான்!

ஆனால், அதற்கு இன்னும் எத்தனையோ கணப்பொழுதுகள் கழிய வேண்டுமே என்று நினைத்து அதுவரையிலும் மலர்ப்பந்தைப் பத்திரப்படுத்தி வைப்பதற்கு இடம் தேடிக் கொண்டிருந்தேன். இந்த முயற்சியினிடையே நண்பர் சொன்ன தத்துவம் மனத்தில் மாறிமாறி ஒலித்துக் கொண்டிருந்தது. அதை மிருதுவாக வாய்க்குள்ளே முனகிக் கொண்டிருந்தபோது எப்படியோ கங்கைகொண்டானில் நடந்த அந்த மலர்ப்பந்து—உபாக்கியானம் நினைவுக்கு வந்துவிட்டது! அன்று மீனா போட்ட அந்தப்பு திரும்கூட ஞாபகத்துக்கு வந்தது! அந்தப் பழைய நிகழ்ச்சியை மறுபடியும் என் இதயத்தினுள்ளே நானே ஒவ்வொரு பாத்திரமாகவும் நின்று நடித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்...

இன்று நண்பர் சொன்ன இதே விஷயத்தைத்தான் அன்று சந்தர்ப்பத்திற்கேற்றவாறு நான் மாற்றிச் சொன்னேன். மனசுக்குப் பிடித்த பொருள்களை மனசுக்குப் பிடித்தவர்களுக்குக் கொடுத்து அழகை அனுபவிப்பது!... குழந்தைகள் அழகிய வஸ்துக்களைப் பிறருக்குக் கொடுத்து அழகை ரசிப்பது! இதைச் சொன்னதும் அன்று என்ன வார்த்தை சொன்னாள் மீனா!

'எனக்கு அன்று இந்த ரசனை ஏற்பட உண்மையில் ஒரு காரணமும் இருக்கவில்லை. ஸரோ கொடுத்த மலர்ப் பந்தை உனக்கு நான் கொடுக்க வேண்டுமென்று எதிர் பார்த்துத்தான் என்னைக் குத்திக்காட்டி அன்று அப்படிப் பேசினாய். கண்ணிழந்தும் உனக்கிருந்த சௌந்தர்ய உணர்ச்சி எனக்கு இல்லாமல் போய்விட்டது. மீனா! அந்த உணர்ச்சியளவுக்கு நான் என்னை உயர்த்திக்கொள்ள நீ என்னைப் பாவித்ததுபோல நான் உன்னைப் பாவித்திருக்க வேண்டுமல்லவா?'

கல்யாணத்தன்று எனக்குள்ளே நான் சொல்லிக் கொண்ட இந்த வார்த்தைகளும் மட்டற்ற அந்த அனுதாப உணர்ச்சியில்தான் பிறந்தன. ஆனால் இனிமேலும் இந்த அனுதாபத்தை அனுமதிப்பது எப்படி?

தினந்தினமும் என்னவெல்லாமோ எதிர்பார்த்து நின்ற அவளுக்கு, குருடாகப் போயும் ஒளிபிறக்க வழி கிடைத்தது என்று சரியாகவோ தப்பாகவோ நினைத்துக் களித்த மீனு வுக்கு, அனுதாபம், அனுதாபம் என்று கண்ணீர் வடித்து அவளை மனத்திலும், உணர்ச்சியிலும், ஆசையிலும் நிரந்தர மாகக் குருடாக்கிவிட்ட என் பழைய இரக்கச் சித்தத்தை ஒரேயடியாக ஒழித்துவிட்டேன். மனசால்கூட நான் அவ ளுக்காக இரங்குவது பெரிய நம்பிக்கைத் துரோகமாகப் பட்டது.

* * *

இன்று அனுதாபம் கொள்ள இஷ்டமில்லை. மீனுவின் ஆவலைப் பூர்த்தி செய்யாததற்கு, செய்ய இயலாமல்போன தற்கு உள்ளம் பச்சாதாபப்படவும் இசையவில்லை. பச்சா தாபப் பட்டு பரிகாரம் தேடுவதற்கேற்ற மனித சம்பந்தம் அல்லவே இது! அவளுக்காக இரங்காவிட்டாலும், கங்கை கொண்டான் வழியாக நான் பிரயாணம் செய்ய நேரிடும்போதெல்லாம் மனத்தில் ஏதோ ஒரு வேதனை உணர்ச்சி பீறிடுகிறது. சந்தர்ப்ப விசித்திரங்களால், தாம் பத்ய ரீதியில் இல்லாவிட்டாலும், இதயத்தைக் காதலைப் போல் வேகத்துடன் பற்றி அங்கே வந்து வாசம் செய்யத் தக்க அதீதமான நட்புரிமையோடு பழகியவள் என்ற ஒரே நினைவுதான் மீனுவைப் பற்றி என் சிந்தையில் எஞ்சி இருக்கிறது. இந்த விசித்திரமான தொடர்பின் சூட்சமங் களால் இன்று கங்கைகொண்டான் ஓர் இதிகாசப் பட்டண மாகத் தோன்றினாலும் அதில் அதிசயப்பட என்ன இருக் கிறது; அதேசமயத்தில், இப்படிப்பட்ட மர்மங்களை எல்லாம் விளக்கிப் புலப்படுத்த முயலும்போது என்னை ஏதோ ஒரு பைத்தியம் என்று நினைத்து என் மனைவி உள்ளுக்குள்ளேயே சிரித்துக் கொண்டால் அதிலும் அதிசயப்பட என்ன இருக்கிறது?

*

# ரச விகாரம்

1

அது நடந்து மூன்று நாட்களாகி விட்டன. முதலியாருக்கு அன்றிருந்த கோபம் இன்றில்லைதான். கோபம் அவிந்திருந்தது; ஆனால் தீ அவியவில்லை; இன்றும் கனல் பறக்க, உள்ளச் சொக்கப்பனையில் தழல் கொழுந்துகளைச் சுழற்றிச் சுழற்றி வீசிக்கொண்டுதான் இருந்தது.

"அப்படி அக்கிரமமாகத் தொட்ட கையை ஒடித்து நாய்க்குப் போட்டிருக்க வேண்டாம்? போக்கிரிப் பயல்!" என்று அன்று குமுறிய மைத்துனர் பாபநாச முதலியாரின் சொற்களும் சங்கரலிங்க முதலியாரின் ஞாபகத்துக்கு அடிக்கடி வந்து கொண்டிருந்தன. 'பயலைக் கண்டிச்சுத்தான் இருக்கணும். இப்படி விட்டது தப்பு. இனியும் அவன் மனசு திருந்திச் சும்மா இருப்பானா? போன இடத்திலேயும் நாலு பெரிய மனுஷாள் வீட்டில், நிறை பொலியிலே இந்தக் கழுதை வாய் வைக்காமல் இருக்கப் போகுதா? சும்மா விட்டது தப்புத்தான்.'

இந்த முறையிலும் சங்கரலிங்க முதலியார் தம் தப்பிதத்தை நினைத்துப் பார்ப்பதின் மூலம் தம்மைத்தாமே தாக்குப் பிடித்து மன உளைச்சலை எட்டி மிதிக்கப் பார்த்தார். 'ஆண்மை செயலிழக்கவில்லை. ஆனால், தப்புப் பண்ணி விட்டோம்' என்ற நினைப்பே அவருக்கு ஆதரவு. ஆனால், அந்த நெஞ்சுத் தீ மடியில் கட்டிய நெருப்பைப் போல நெஞ்சைச் சுட்டு எரித்தது. அதைச் சகிப்பதற்கு, தாம் பழிக்குப்பழி வாங்கத் தவறிய 'முட்டாள் தனம்', அந்த

'முட்டாள் தன'த்துக்கு பாபநாச முதலியாருக்கு முன் பெருந்தன்மையென்று வியாக்கியானம் செய்துகொண்ட தப்பிதம்—எல்லாவிதத் தவறு தப்பிதங்களும் சேர்ந்து அவருக்கு இருப்புக் கவசங்களாக, வஜ்ர அங்கிகளாக வந்து உதவின. என்ன இருந்தாலும்...எதுக்கு நம்ம புத்தி அப்படிப் போச்சு? கொஞ்ச நேரத்திற்கு முன்னுலே கொலை செய்யக்கூடத் தயாரா இருந்தோம். அப்புறம் அந்தப் பயலையும், அந்தச் சிறுக்கியையும் ('உம் ஜாக்கிரதையாகப் பேசுடா சங்கரலிங்கமுதலி, என்ன இருந்தாலும் அவள் பெத்த மகள்; சிறுக்கின்னு சொல்லுறையா நீ?' இப்படியும் தம்மைத்தாம் அதட்டிக்கொண்டு சிந்தனையைத் தொடர்ந்தார்) அந்தக் கழுதையையும் பார்த்த பிறகு அப்படி என்ன எழவுக்குச் சாந்தம் பிறந்தது? பயல் வசிய மை வைத்திருந்து நம்மைப் பணிய வச்சுட்டானு?

அன்றிருந்த கோபம் இன்றில்லை. ஆனுல் கோபம் குறையக் குறையத் தீ வளர்ந்தது; நினைத்துப் பார்க்கப் பார்க்கத் தீ வளர்ந்துகொண்டே வந்தது.

ஃ ஃ ஃ

இரண்டு வருஷங்களுக்கு முன்பு என்றே ஒரு நாள் அம்பாசமுத்திரத்தில் ஒரு கல்யாண வீட்டில் வைத்து முதலியார் தியாகராஜனைப் பார்த்தார். கல்யாணத்துக்குப் போய், முகூர்த்தம் முடிந்து எழுந்திருப்பதற்கு முன்னமேயே, அந்தச் சொற்ப காலத்தில், ஸ்ரீவைகுண்டத்தைச் சேர்ந்த நாலைந்து ஊர்களிலிருந்து வந்தவர்களின் வாய்மொழியில் தியாகராஜனைப்பற்றி வந்த பாராட்டுக்களுக்கும் புகழ்ச்சியுரைகளுக்கும் கணக்குக் கிடையாது. முதலியார் இதைக் கேட்டுக் கேட்டு அசந்து போய்விட்டார். ஒவ்வொருவரும் வந்து, தியாகராஜனைப் பற்றிச் சொல்லும் போது, அவன் முகத்தைச் சற்று ஏறிட்டுப் பார்ப்பார். அப்போது அந்தப் பாராட்டுரைக்கும், முதலியாருடைய கற்பனைக்கும் ஏற்றவாறு அவன் முகம் அவருக்குக் காட்சியளிக்கும். தியாகராஜன் ஊராகிய முரப்ப நாட்டைச்சேர்ந்த ஒருவர் வந்து, "தியாகராஜன் பி. ஏ. தான் படிக்காமல் வந்து

விட்டான். எப். ஏ. படிக்கும்போது உடம்புக்குச் சொகமில்லாமப் போச்சு. ஆனால், இந்தக் காலத்துப் பயல்களைப் போல ஒரு பீடி சிகரெட்டு, பொடி போயிலே, வெத்திலை பாக்கு—இப்படி ஏதாவது ஒண்ணுண்ணு அவன் சென்மத்திலே தொட்டறிஞ்சிருக்க மாட்டான்'' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு வரும்போது வழக்கம்போல முதலியார் தியாகராஜனைப் பார்த்தார். அப்போதுதான் ஒருவர் தாம்பூலத் தட்டை எடுத்துத் தியாகராஜனுக்கு முன்பாக நீட்ட அவன் பக்கத்திலே இருந்த பெரியவர்களுக்குக் கொடுக்கும்படி மிகவும் பவ்வியமாய் ஆக்ஞாபித்தான்.

(''ஆஹா! பெரிய வீட்டுப் பிள்ளைன்னு இதுதான்!''—இது முதலியார்!) பக்கத்தில் இருந்தவர்களுக்குத் தாம்பூல சேவையானபின் பழையபடியும் தியாகராஜன் முன் தட்டேந்திய ஆசாமி வரும்போது, இரண்டு விரல்களால் எண்ணி எடுப்பதுபோல இரண்டே இரண்டு வெற்றிலை, ஒரு சின்னப் பாக்குத் துண்டு—இவற்றை எடுத்து, பக்கத்திலே ஜமக்காளத்தில் வைத்துவிட்டு வழக்கம்போல் உட்கார்ந்து கொண்டான்.

''பாத்திகளா? வெத்திலே எடுத்ததைப் பாத்திகளா இன்னேன்...?'' என்றார் முரப்ப நாட்டு முதலியார்.

''இரண்டு வெத்திலைகளை உபசாரத்துக்கு எடுத்துக்கிட்டது'' என்று பூரிப்போடு சிரித்தார் முதலியார்.

''இதில்லையா பிள்ளைக்கு லெட்சணம்?''

சங்கரலிங்க முதலியாருக்குத் தியாகராஜனோடு ஒரு நிமிஷமாவது உட்கார்ந்து பேசவேண்டும் என்ற ஆசை. 'திருநெல்வேலிச் சீமையிலே நம்ம முதலிகள் எந்தக் காலத்திலேயும் அடுத்தவனை இறக்கி வச்சுப்பேசறதுதான் வளமை. ஆனால், இந்த முரப்ப நாட்டுப் பிள்ளையாண்டானைப் பத்தி, வந்தவனுலே ஒருத்தவனாவது ஒரு சொட்டைச் சொல் சொல்லக் காணோமே!'—இந்தச் சந்தோஷத்தில் மூழ்கிய முதலியார் கடைசியில் தியாகராஜனோடு கொஞ்சம் உட்கார்ந்து பேசினார். அவனுக்குக் கல்யாணமான செய்தியைக் கேட்டுத் தெரிந்து கொண்டார். பிறகு,

குலம் கோத்திரங்களை விசாரித்துக் கொண்டிருந்தபோது, அவன் தம் மனைவியுடைய பாட்டனார் வகையில் ஒட்டிய, தமக்கு மகன் முறையாக உள்ள உறவினனாகப் போய் விடவே, முதலியார் மனம் மகிழ்ந்து, அந்த மகிழ்ச்சியை உலகத்துக்குப் புலப்படுத்தும் முறையில், "ஐயா! ரத்தத்திலே ஒட்டின அந்த உறவு எங்கே போகும்? பாட்டன் பூட்டன் காலத்திலேயிருந்து மனுசத்தரம் சம்பாதிச்ச குடும்பத்திலே பிறந்தவக; நாமொ...தம்பியைப் பத்தி நல்லாக் கேள்விப்பட்டுக் கிட்டேன். தம்பி முரப்ப நாட்டுக்குத் திரும்புறப்போ, நம்ம ஊருக்கும் கொஞ்சம் விலகிட்டுப் போகலாமே!" என்று அவனைத் திருநெல்வேலிப் பேட்டைக்கு வந்து போகச் சொன்னார் முதலியார்.

"மன்னிக்கணும், இன்னொரு சமயம் வர்ரேனே!"

"மன்னிக்கணும்."—சம்பிரதாய பூர்வமாக ஆங்கிலத்தில் பிரயோகிக்கும் பதம் இது என்று முதலியாருக்குத் தெரியாது. 'மன்னிக்கணும்' என்ற சொல்லுக்கு உண்மையான அர்த்தம் எதுவோ அதை அப்படியே வியாக்கியானம் செய்து, தியாகராஜனுடைய பெருந்தன்மையைப் பாராட்டினார் முதலியார்.

## 2

பேட்டைக்கு வந்த முதலியாருக்கு, ஒரு யோசனை உதித்தது; 'பண்ணைக் காரியங்களைக் கவனிப்பதற்கு ஆண் வாரிசு இல்லை. வயசு அறுபதை எட்டிப் பிடிக்க இன்னும் கோடி வருசமா இருக்கு? அப்படியிருக்கிறப்போ தியாகராஜனைக் கொண்டு வந்து பண்ணைக்குக் காரியஸ்தனாக்கி விட்டால் என்ன?'

இந்த யோசனை கோழிக் கர்ப்பம்போல மாதம் கழியும் முன்பே பூரண உருப்பெற்று விட்டது. முரப்ப நாட்டுக்கே போய்க் காரியத்தை முடித்து, முதலியார் வெற்றிகரமாகத் திரும்பிய இரண்டொரு நாட்களுக்குள்ளாகத் தியாகராஜன் பேட்டை வந்து சேர்ந்தான். தம் வீட்டுக்கு எதிர்வரிசை

யில் நாலைந்து வீடுகள் தள்ளியிருந்த சௌகரியமான வீட்டில்,வேண்டிய தயாரிப்புகளோடு தியாகராஜனைக்கொண்டு போய்க் குடியமர்த்தினர். உடல் அசௌகரியத்தினால் தியாகராஜனுடைய மனைவி அப்போது அவனோடு வரவில்லை யென்றபோதிலும், குடும்பக் காரியங்களுக்கு வேண்டிய பண்ட பாத்திரங்களும் தட்டுமுட்டுச் சாமான்களும் வீட்டை அடைத்துக் கொண்டிருந்தன. மனைவி வரும் வரையில் முதலியார் வீட்டிலேயே தியாகராஜன் சாப்பாடு வைத்துக் கொள்ளுவது என்று ஏற்பாடு.

3

தியாகராஜன் வந்து இரண்டு வருஷங்களாகப் போகின்றன. துரதிஷ்டவசமாக அவனுடைய மனைவி இன்னும் க்ஷயரோகம் குணமாகமல் நாகர்கோவில், ஆசாரிப்பள்ளம் க்ஷயரோக ஆஸ்பத்திரிலேயே இருந்து வந்தாள். மாதத்துக்கு ஒருதடவை தியாகராஜனிடமிருந்து ஆஸ்பத்திரியில் அவன் மனைவியோடிருக்கும் தாயாருக்குப் பணம் போகும்; மாதத்துக்கு இரண்டுதடவைகள் தியாகராஜன் போவான்.

இந்த இரண்டு வருஷங்களிலும் முதலியாரின் நெல் மகசூலின் வரவு முந்திய வருஷங்களைவிட இரட்டிப்பாக இருந்தது. பண்ணையில் ஏற்படும் செலவுகளும் ஒன்றுக்குப் பாதியாகக் குறைந்தன. முதலியாருக்கு இப்போது நிம்மதியான வாழ்க்கை. வீட்டில் சுபீட்சம் பெருகியதற்கு தியாகராஜன் தம் வீட்டில் காலெடுத்துவைத்த நேரபலன், அவன் கைராசி, அவனுடைய சமர்த்தியம்—இவைதாம் காரணங்கள் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை அவருக்கு.

'ஆம்பளைப் பிள்ளையில்லேன்னு குறைப்பட்டதுக்குப் பகவான் அனுப்பிவைச்ச ஜேஷ்ட புத்திரன் ராசையா (அதாவது தியாகராஜன்). பார்வதிக்கும் அண்ணன் கிடைச்சான்.'

இப்படிப்பட்ட மனத்தீர்மானத்தின் அடிப்படையில், தியாகராஜனைப் பற்றி ஊராரிடம் புகழ்ந்துபேசாத நாளேஸ்

லாம் பிறவா நாளாக முதலியார் காலம் கழிக்கும் சந்தர்ப்பம்...

அன்று இரவு பத்துமணிக்குத்தான் ஒரு ஜோலியாக பாளையங்கோட்டைக்குப் போன முதலியார் திரும்பி வந்தார். அப்போது சமையல்காரன் தன் வீட்டுக்குப் போய், விட்டான். அதனால், முதலியாரின் மகள் பார்வதியே வந்து முதலியாருக்கு இலை போட்டாள். கூழ் வடகத்தையும் முறுக்கு வற்றலையும் இலையில், வைத்துக்கொண்டே "இன்னிக்கு அண்ணுச்சியம் சாப்பிட வரக் காணுமே, எங்கே போயிருக்காகளோ" என்று மெல்லிய குரலில் சொன்னாள் பார்வதி.

"என்ன, இன்னுமா சாப்பிடலே? டவுனுக்குப் போன பிள்ளை இன்னும் திரும்பலியா? யாரையும் அனுப்பிப் பார்த்துட்டு வரச்சொல்லக்கூடாதோ? மணி பத்தாகியும் சாப்பிட வரலேன்னு, இப்படியா கவனிக்காமல் இருக்கிறது? வெளியே யாரும் இருந்தாக் கூப்பிட்டுப் போகச் சொல்லு" என்று படபடப்பாகச் சொல்லிவிட்டு அரை குறையான மனத்துடன் ஒரு கூழ்வடகத்தை எடுத்து வாயில் பேட்டுக் கொண்டார் முதலியார்.

பார்வதி ஆளனுப்பிவிட்டு, உள்ளே வந்து சாதத்தை எடுத்துக்கொண்டு வந்தபோது, முதலியார் சிரித்துக் கொண்டே, "எனக்கு முறுக்கு வத்தல் எதுக்கு வச்சே, பார்வதி? பல் பூராவும்தான் காத்தடிச்சாலும் தலை சுத்தியாடுதுன்னு உனக்குத் தெரியுமே?" என்று செல்லிவிட்டுச் சாதத்தை நெய்யில் குழைத்தார்.

உள்ளே போன பார்வதிக்குச் சிரிப்புவந்தது; லஜ்ஜையும் வந்து விட்டது. கீழுதட்டை இறுகக் கடித்துக் கொண்டு, பக்கத்திலிருந்த தூணில் நாலைந்துதடவை காரணமில்லாமல் தொடர்ந்து தட்டினாள். சபையில் சந்தோஷத்தால் கரகோஷம் செய்யும் தாளகதி அவள் தட்டிலே ஒலித்தது. அப்பாவுக்கும் தியாகராஜனுக்கும் வித்தியாசம் தெரியாமல் முறுக்கு வற்றலை அப்பாவுக்கு எடுத்துவைத்து விட்டாள்! இப்படித் தன்னை மறந்துவிட்ட தன் அசட்டுத்

தனம் என்ற பேரின்பத்தில் ஆழ்ந்து, வற்றல் குழம் புடன் பார்வதி வெளியே வந்தபோது, வாசலில் செருப்புச் சத்தம் கேட்டது.

'அவர் வந்து விட்டார்!'—நாணம், சந்தோஷம் என்ற இரு தந்திகள் தம் உராய்வினுல் அவளுடைய மனமாளிகை யில் மின் விளக்குப் பேட்டன.

அவ்வளவுதான். அவள் கைகள் செம்பில் நீர் மொள்ள கால்கள் வசற்படிக்கு இழுக்க, வெளியே வந்தாள். தியாக ராஜன் கைகால் கழுவி உள்ளே வருமுன்பே, "ஏது இவ்வ ளவு நேரம்?" என்ருர் முதலியர்.

"கொஞ்சம் சோலியிருந்தது. தருவைக்குப் போயி ருந்தேன். வேலாயுதம் பிள்ளையிடம்..."

"அவன்தான் நகட்டு வாரிப் பயலாச்சே. 'குடுக்க வேண்டிய ரூபாயிலே, ஏதோ பத்து அஞ்சைத் தள்ளிட் டாவது கணக்குத் தீர்த்திரடா, உனக்கும் நல்லது; எனக் கும் நல்லது' இன்னு நூறு தடவை சொல்லியும், இந்தா அந்தா, இப்போ பெறகுன்னு தவணை போட்டுக்கிட்டும், பாத்த இடத்திலே துண்டை இறக்கிறதும், பல்லை இளிக் கறதுமாயிருக்கான். பயலை நூறு எரனூறு செலவழிச் சாவது கோர்ட்டிலே இழுத்தடிச்சாத்தான் ரூபாயைக் கீழே வைப்பான்..."

தியாகராஜன் இடைமறித்து, ஆனுல் பணிவான குர லில், "இனிமேலே கோர்ட்டுக்கு எதுக்கு?" என்ருன்.

முதலியார் நிமிர்ந்து உட்கார்ந்து, தியாகராஜனைக் கூர்ந்து கவனித்தார்.

"ரூபா வந்திட்டது. மேல ரத வீதியிலே, கிளப்பிலே சாப்பிட்டுவிட்டுக் கையைத் துடைச்சுகிட்டு வெளியே வந்தார். சந்தர்ப்பமா பார்த்துகிட்டேன். முதலிலே வழக்கம் போலத்தான் பேச ஆரம்பிச்சார். கொஞ்சநேரம் பேசிக்கிட்டு இருந்தோம். கடைசியிலே, 'தருவைக்கு வந் துட்டு வாருங்களேன். ரூபாயைக் கணக்குப் பார்த்து நோட்டை ஓச்சிறலாம்' இன்னுர். போய் ரூபாயை வாங்கிக் கிட்டு வந்தேன்."

"என்ன அதிசயமாயிருக்கே ராசையா! கல்லிலே நார் உரிச்ச கதையா வில்லே இருக்கு! அப்போ தம்பி புரோ நோட்டைக் கையோடே கொண்டு போச்சா?"

"போறப்போ எதுக்கும் இருக்கட்டும்னு பாக்கட்லே வச்சிக்கிட்டுப் போனேன்."

"அப்படியா!"

முதலியார் சந்தோஷத்தோடு வெளியே கை கழுவ வந்தார். தியாகராஜன் ரசத்தைச் சாதத்தில் மாறிமாறிப் பிசைந்து குழைத்துக் கொண்டு சாப்பிட்டான்.

முதலியாருடைய சந்தோஷத்தைப் பார்வதியின் சந் தோஷம் வென்றது. இரண்டு கண்களின் திருக்ஷ்டியையும் ஒரு கண்ணின் ஊசி முனைக் கோணப் பரப்பில் கேந்திரப் படுத்தி தியாகராஜனைப் பார்த்தாள் பார்வதி. தியாக ராஜன் சுற்று முற்றும் பார்த்து விட்டு இடது கையால் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு புனுகுச் சிமிழையும், இரண்டு ரோஜாப் பூக்களையும் எடுத்து நீட்டினான். பார்வதி கையை நீட்டும்போது புனுகுச் சிமிழை மட்டும் கொடுத்து, "ஊஹூம். இதை இப்போத் தரமாட்டேன்" என்று 'குசுகுசு' வென்று சொல்லிவிட்டு ரோஜாப் பூக் களைப் பழையபடியும் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு சாப்பிட்டு எழுந்தான் தியாகராஜன்.

'மக'னை வழியனுப்பி விட்டு, மகளை வீட்டுக்குத் தாழிடும்படி கூறிவிட்டு, வாசல் திண்ணையிலிருந்த கட்டி லில் போய்ச் சாய்ந்தார் முதலியார்.

பார்வதியும் வாசல் கதவுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் போட்டுப் பத்திரப்படுத்திவிட்டு, வீட்டின் நாலைந்து கட்டுக்களைக் கடந்து புறவாசல் கூடத்தில் போய்க் காற் ருடப் படுத்தாள்.

## 4

இன்னும் கோழி கூப்பிடவில்லை. உதயத்தின் ஒளி படர்வதற்கு இனி ஒரு நிமிஷமோ இரண்டு நிமிஷமோ என்றிருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில்...

எதிர் வீட்டிலிருந்து இயற்கை உபாதையின் பொருட்டு சந்தர்ப்ப வசமாக வெளியே வந்த மைத்துனர் பாபநாச முதலியார் சுற்றுமுற்றும் கைப் பாட்டரியினுல் அடித்துப் பார்த்தார். அப்போது தம் வீட்டுக்கு நாலைந்து வீடுகள் தள்ளியிருக்கும் ஒரு வீட்டு வாசலில் ஒரு கரிய உருவம் சுவரோடு பாட்டரி வெளிச்சத்திற்கு அஞ்சி ஒண்டியதைப் பார்த்துக் கொண்டார்.

'யாரோ எவனோ?' என்ற பயம் முதலில் அரிச்சல் எடுத்தது. அப்புறம் கூர்ந்து பார்த்தார். நிற்பது, பெண்ணுருவம்! செக்கச் செவேலென்றிருந்த அதன் புடவை இருட்டில் தன்னை எவ்வளவுக்கு மறைக்கிறதோ, அவ்வளவுக்கு வெளிச்சத்தில் தன்னை எடுத்துக் காட்டியது.

அது ராசையாவின் வீடுதான் என்பதை மனசில் நிச்சயப்படுத்திக் கொண்டு, "யாரது?" என்று உரக்கக் கேட்டார் பாபநாச முதலியார்.

பதில் இல்லை.

மறுமுறையும் அப்படியே கேட்டார். பதில் இல்லை. பாட்டரியும் கையுமாகப் பக்கத்தில் போனுர். போய்ப் பார்த்தால்...

பார்வதி!

வாசற்படி கடவாதவளாய், அந்தப்புரத்திலேயே பருவமடைந்த நாள் முதல் காலம் கழித்து வந்த பார்வதி!

"என்ன இங்கே இருக்கே பார்வதி?" என்று மெல்லொலியில் உசாவினுர். சொல்லின் வைரம் புழுவரித்துப் போய்க் கலகலத்தது.

அவருடைய கேள்விக்குப் பதில் ஏது?

வீட்டு வாசல் பூட்டிக் கிடந்தது. உள்ளே எரிமலை குமைந்து கொண்டிருந்தாலும், பூமியின் வெட்ட வெளியில் அமைதி குடிகொள்ளும் பாவனையில் அந்த வீட்டில் ஒரே அமைதி; எட்ட நின்று அடுத்தவர்களின் இருதயத் துடிப்பையும் கேட்கக்கூடிய அமைதி.

பாபநாச முதலியாருக்கு விஷயம் புரிய வேறு கேள்விகள், வேறு காரணங்கள் தேவையாக இருக்கவில்லை.

''கதவைத் திறடா, அயோக்கியப் பயலே'' என்று ஒரு தடவை உரத்துக் கூவியதோடு நிறுத்திக்கொண்டார். ஒழுக்கக் குறைவைவிட, ஒழுக்கக் குறைவின் பகிரங்கமே மனிதனுக்கு எமன் என்ற ரகசியம் 'பட்' டென்று நெஞ்சில் பட்டது முதலியாருக்கு. பார்வதியைக் கவனியாமல், 'விறு விறு' வென்று வந்து தம் அத்தான் வீட்டுக் கதவைத் தட்டினர். வேலைக்காரன் கதவைத் திறந்தான். கட்டிலில் படுத்திருந்த அத்தான் சங்கரலிங்க முதலியாரை எழுப்பினர். அடித்துப் புடைத்துக் கொண்டு எழுந்தார் முதலியார்.

விஷயம் அவருக்குத் தெரிவிக்கப்பட்டது. தீக்குச்சி பெட்டியில் இருக்கும்போது உள்ள நிலைக்கும், பெட்டியில் கிழித்தபின் உள்ள நிலைக்கும் உள்ள வித்தியாசம் போல, முதலியாரின் சாதுவான கண்கள் திடீரென்று தீக் கங்கு களாகி விட்டன. மீசை துடித்தது. பேச்சையும் கொன்று விட்டது, கோபம். கோபம் இருக்க இருக்க மேலே போய் முதலியாரின் பூதசடலத்தின் எல்லையையும் கடந்து எங்கோ மேல்நோக்கிச் சென்றுகொண்டிருந்தது.

''எங்கே அவள்? அந்த இடத்திலேயே இரண்டு பேரையும் நிலவறையிலே வச்சிருக்கப்படாதா?''

''நன்றி கெட்ட பயல்! வேஷக்காரன்...அந்த நாயை மகனுக வச்சிருந்ததுக்கா இது? தங்கச்சி முறையின்னு குலம் கோத்திரம் விசாரிச்சுத் தெரிந்தும், இப்படி முறை கெட்ட காரியம் செய்தவனை வெட்டிவச்சுட்டுத்தான் மறு சோலி...''

''எங்கே அவள்?...''

''.........''

கோபத்தால் என்ன சொல்லுவது, என்ன செய்வது என்றே தெரியவில்லை அவருக்கு. மைத்துனர் எழுந்து பார்வதியை அழைத்துவர வெளியே போனுர்.

கோபம் வளர்ந்தது.

'அண்ணனும் தங்கையுமா இது...?'

மனசு ஒரு ரசத்துக்கும் ஒத்துவராது, ரசவிகாரத்துடன் அபசுரம் பேசியது. ஒரே குழப்பம்! நல்லது கெட்டது என்று வேறுபடுத்த இயலாத, எட்டாத தொலை தூரத்துக்கு அவரைக் கொண்டுபோய் விட்டது அவரது கோபம். கோபம் என்ற எல்லையையும் தாண்டி வேறு ஏதோ ஒன்ருக ஆய்விட்டது அந்தக் கோபம். முதலியாரும் ஏதோ ஒன்றுதான் செய்து கொண்டிருந்தாரே ஒழிய, கோபம் கொண்ட உணர்ச்சியும் நினைவும் அவரிடம் இல்லை!

பழைய சித்திரத்துக்கும் மனசுக்குள் பரிசுத்தவானுகத் தியாகராஜனைப் பாவித்து, தெய்வம்போல அவ்வளவு, புனித பாவத்தை அவனுக்குக் கற்பித்து, அவனைத் தமக்கு ஜேஷ்ட குமாரனுக்கி, தம் மகள் பார்வதிக்கு உடன் பிறந்தவன் என்று எழுதிப் பார்த்த அந்தப் பழைய சித்திரத்துக்கும்—இப்போது நிலைகுலைந்து போய், ஒரு வழியிலும் சேராமல் முரண்பட்டுக் கண்முன் தெரியும் அலங்கோலச் சித்திரத்துக்கும் உள்ள தலைகீழ் விரோதத்தை அவரால் தாங்க முடியவில்லை. மிகமிகக் கேவலமான முறைகேடு, தம் சொந்த வீட்டிலேயே பிரதியக்ஷமாக நிகழ்ந்ததனுல் ஏற்பட்ட விகாரமும், அதனடியாகப் பிறந்த கோபமும், குழப்ப நிலையும் அவர் உள்ளத்தில் ஒன்ருகப் பிணைந்து பிணைந்து சிதறின. முதலியார், முதலியார் என்ற தத்துவத்தைக் கடந்து அர்த்தமற்று ஏனே, எங்கோ, எப்படியோ சுய பிரக்ஞையின்றி உட்கார்ந்துவிட்டார்.

பார்வதி புறவாசல் வழியாகத்தான் உள்ளே வந்தாள். குனிந்த தலையுடன் சுவரோரம் நிற்கும் பார்வதியைப் பார்த்தார் முதலியார். 'வாரி முடித்த கொண்டை வரிசை குலைந்து' இரவு சாப்பிடும்போது தலையில் காணப்படாத இரண்டு கசங்கிய ரோஜா மலர்கள் இப்போது கூந்தலில் தொடுக்கிக் கொண்டிருக்க, தலை குனிந்த வண்ணம் வந்து நின்ருள் பார்வதி. புனுகு வாடை வீட்டில் அலைமோதி, முதலியாரின் நாசியில் மயானப் புகையாக வீசியது.

முதலியார் கூர்ந்து பார்த்தார். அவருடைய தொண்டை அடைத்துக் கட்டிக்கொண்டது. பேச, கைகால் ஆட்ட, அப்பால் திரும்ப—எதற்கும் வழியற்று உயிரிழந்திருந்தார்.

"உம்" என்று சொல்லிச் செருமிவிட்டு மௌனமாக அந்த இடத்தை விட்டு நகர்ந்தார். துரோபதை துகில் உரியப்படும் காட்சியைக் கண்டும் தருமனுக்குப் பணிந்து கைகட்டிய வீமனைப் பின்னோடு நடந்து வந்தார் மைத்துனர். சிறிது நேரம் விபரீதமான ஒரு மௌனம் நிலவியது. அந்த மௌனத்திடையே......

"பாபநாசம்!"

அமைதியோடு, தெளிவோடு, ஆனால் ஈனசுரத்தில் வார்த்தை புறப்பட்டது:

"உடனே கணக்குப் பார்த்து அவனை—(திக்கிக் கொண்டு)—அவரை விடியறதுக்குள்ளே ஊருக்கு அனுப்பிடுங்கோ."

"அனுப்பவா? ஒத்தக் கையை வாங்காமே அவனை அனுப்ப இந்தப் பாபநாசம் சீலையைக் கட்டிக்கிட்டு இருக்கல்லே! பேடிப் பயல்னு நினைக்கவா அவன்? அது..."

"உஸ் சத்தம்! மனசை அடக்குங்கோ. அடே, கந்தையா, போய் அவரைக் கூட்டியா—பேசாமே கூட்டியா" என்று சொல்லி வேலைக்காரனை அனுப்பிவிட்டுக் கையைப் பிசைந்தார்; வானத்தைப் பார்த்தார். கண்களில் கோபப் பெருக்கு ரத்தமாய்ப் பொங்கிப் பொங்கி உறைந்தது. கோபம் இன்னும் மேலே போய்க் கொண்டிருந்தது. கோபம் இன்னும் மேலே போய்க் கொண்டிருந்தது. கோபம் கொடுக்க நினைத்த தண்டனையின் அளவு, உயிர்ச் சேதத்தையும் கடந்து அப்பாலும் எத்தனையோ காததூரம் போய்விட்டது.

முக்காடிட்டுக் கொண்டு வந்தான் தியாகராஜன்; வந்து நின்றான்.

முதலியார் உட்காரச் சொன்னார். உட்கார்ந்தான்.

வெகு சீக்கிரமாகவும், அமைதியாகவும் கணக்குப் பார்க்கப்பட்டது.

"மச்சினர் கிட்டே தஸ்தாவேஸுகளைப் பார்த்து எடுத்துக் குடுத்திடுங்க."

"சரி" என்று தலைகுனிந்துகொண்டு பதில் சொன்னான் தியாகராஜன்.

பக்கத்திலுள்ளவர்களுக்குத்தான் முதலியார் பேசுவதாகத் தோன்றியதே ஒழிய, முதலியாருக்கு அப்படித் தோன்றவில்லை.

"ஏதாவது காப்பி கீப்பி போடச் சொல்லிச் சாப்பிட்டு..."

"வேண்டாம், நானே போறேன்."

பாபநாச முதலியாருக்குத் தம் அத்தான் மீது வந்த கோபத்திற்கு அளவேயில்லை. சங்கரலிங்க முதலியாருக்குக் கோபம் விஸ்வரூபம் எடுத்தது. கோபம் தன் பரப்பின் திகாந்தங்களைக் கடந்து மேலும் படர்ந்தது. ஆனால் அங்கே ஒரே அமைதிதான் நிலவியிருந்தது!

ஒரு ரசத்துக்கும் ஒரு குணத்துக்கும் ஒட்டாத இந்தக் குழப்ப நிலையிலிருந்து, அந்தர நிலையிலிருந்து, இறங்கி மனிதனோடு மனிதனாக மாற முதலியார் பழைய நினைவையும் புதிய நினைவையும் மறந்துவிட்டு, அப்போதையை கணத்தையே தம் ஆயுளின் ஆதி அந்தங்களாகக் கொண்டு தாம் தப்பும் உபாயத்தை எட்டிப் பிடித்தார். அவருடைய பூத உடலும் நெஞ்சும் துடித்தாலும், அவரைவிட்டு விலகிய மனத்தின் ரசப் பண்பு தன் வாழ்க்கையில் கத்தரிப்பு விழாமல் வாழ்க்கையை நீடித்துக்கொண்டு போகத் துடித்தது.

"சரி கந்தையா, வண்டி எடுத்துக்கிட்டுப் போயி பேட்டை ஸ்டேஷனிலே விட்டுட்டு வா."

இத்தோடு காரியம் முடிந்தது. எப்படியோ முடிந்தது.

தியாகராஜன் போய்விட்டான்.

மௌனமாக அவனைப் பின்தொடர்ந்து போனார் பாபநாச முதலியார்.

கட்டிலில் படுத்த முதலியார் சிறிது நேரத்தில் எழுந்து நின்ருர். உச்சத்தில் நின்ற கோபம் ஏறியதோ...தணிந்ததோ......?

'ஊரைவிட்டு அவன் ஒழியட்டும்' என்ற ஒரே நினைப்புத் தான் அவருக்கு.

பழையபடியும் கட்டிலில் படுத்தார். விடிவதற்குக் கொஞ்ச நேரமே இருந்தது. கோபம் மனசைப் பிசைந்தது. கோபத்தின் உச்சத்தில், கோபத்தையே துணையாகக் கொண்டு, உள்ளே இழையோடியிருந்த ரசம் தன் கத்தரிப்பைப் பழையபடியும் பொருத்தி முதலியாரைப் பிரக்ஞைக்குக் கொண்டுவந்து மனிதனுக்கியது.

அவர் தம் மனப்பளிங்கில் ஒட்டிய களங்கத்தை அறவே வழித்தெறிந்துவிட்ட பிரமைக்கு உவமையாக...

வைகறை ஒளியில் வெளுத்த கீழ்வானின் பகைப் புலனில், நிழற்படம் போலப் பேட்டை ஸ்டேசனை நோக்கிச் செல்லும் இரட்டை மாட்டுவண்டி கன்னங்கரேலென்ற உருவத்துடன் நகர்ந்து கொண்டிருந்தது; சாவதானமாக நகர்ந்து கொண்டிருந்தது.



# பாலம்மாள் கதை

---

பாலம்மாளைக் காட்டிலும் இரண்டு வயது இளையவள் தங்கம்மாள். இவர்களுக்குச் செல்லத்துரை என்று ஒரு தம்பி உண்டு. தகப்பனார் உள்ள நாளையிலேயே பாலம்மாளுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. உள்ளூரில் தாய்மாமனுக்கு வாழ்க்கைப்பட்டிருந்தாள். தாய் மாமன் குடும்பமும் சரி, அவள் குடும்பமும் சரி—இரண்டும் கூலி வேலைசெய்து பிழைக்கும் ஏழைக் குடும்பங்கள்தான். பணக் கஷ்டத்தை உத்தேசித்து, பெருமாள் கோவிலில் கல்யாணத்தை நடத்தினார்கள். கல்யாணச் செலவு மொத்தம் இருபத்தைந்து ரூபாய்தான். தாலியைத் தவிரப் பெண்ணுக்கு வேறு நகை கிடையாது. கல்யாணத்தை முன்னிட்டு ஒரு ஜோடி சிவப்புக் கம்மல்களை இரவல் வாங்கிப் பெண்ணுக்குப் போட்டிருந்தார்கள். பாலம்மாள், கணவன் வீட்டுக்குப் போன மறு வருஷத்திலேயே அவளுடைய தகப்பனார் செத்துப்போய் விட்டார். குடும்பத்தில் மீதி இருப்பவர்கள் தங்கம்மாள், செல்லத்துரை, இவர்களுடைய தாயார் ஆகிய மூவர்தான். ஏற்கனவே வறுமையின் அடி பாதாளத்தில் திக்குமுக்காடும் குடும்பமாதலால், பெரியவரின் மரணம் பொருளாதார ரீதியில் குடும்பத்தைப் பாதிக்கவில்லை. ஒரு ஆள் வரும்படி நின்றது; ஒரு ஆள் சாப்பாட்டுச் செலவும் நின்றது, அவ்வளவுதான். செல்லத்துரைக்கு வயது பத்துக்குள்ளாகத்தான் இருக்கும். அவனால் முரட்டு வேலைகள் செய்ய முடியாது. ஆகவே, அந்த ஊரில் உள்ள ஒரு "பணக்காரர்" வீட்டில் மாதம் ஒரு ரூபாய்ச் சம்பளத்துக்கு ஆறு எருமைகளை மேய்த்துக் கொண்டிருந்தான். தங்கம்மாளும், அவள் தாயாரும் தங்கள் வயிற்றுப் பாட்டுக்கு வழக்கம் போலக்

களையெடுப்பு, பருத்தி எடுத்தல், பருத்தி மார் பிடுங்குதல், கதிர் அறுத்தல் போன்ற கூலி வேலைகள் செய்து வந்தார்கள். ஏதாவது ஒருநாள் மழை பிடித்துக்கொண்டால் மறுநாள் காட்டு வேலைக்குப் போக முடியாது. அதனால், அதற்கு அடுத்தநாள் சாப்பாட்டுக்கு வழியின்றிக் கடன் வாங்கியாக வேண்டும். செல்லத்துரை மாதாமாதம் கொண்டுவரும் ஒரு ரூபாய்ச் சம்பளத்தைப் பத்திரமாகச் சேமித்து வைத்துத் தான் தாயும் மகளும் துணி வாங்கிக் கட்டிக்கொண்டார்கள்.

தங்கம்மாளுக்கு வயது இருபதாய்விட்டது. கல்யாண வயதுதான். உள்ளூரில் மாப்பிள்ளை இல்லை. இதனால் பாலம்மாளின் கணவனுக்கே இரண்டாம் தாரமாகக் கொடுக்கலாம் என்ற ஒரு உத்தேசம் இருந்தது. தங்கம்மாளைக் கல்யாணம் செய்துகொள்ளுவதில் பாலம்மாளுக்கோ அவன் கணவன் மாடசாமிக்கோ தடை எதுவும் இல்லை. என்றாலும் மாடசாமி பொறுப்புத் தெரிந்தவன். தன்னைவிடக் கொஞ்சம் நல்ல நிலையில் உள்ள ஒருவனுக்குத் தங்கம்மாள் வாழ்க்கைப்பட்டால், சிறு வயதிலிருந்து பட்ட கஷ்டங்களுக்கு ஒரு பரிகாரமாக இருக்குமே, தனக்கு வாழ்க்கைப்பட்டால் என்றும்போல அரை வயிற்றுக் கஞ்சிதானே கிடைக்கும் என்று கருதி, கல்யாண விஷயத்தை மறு வருஷத்தில் யோசித்துக் கொள்ளலாம் என்று சொல்லிவிட்டான்.

தங்கம்மாள் அழகான பெண்; நல்ல நிறம்; வறுமையில் உழன்றவளானாலும் முகவாட்டம் என்பது கிடையாது. வீடு நிறைந்த நாச்சியார்; எந்நேரமும் ஒரு கலகலப்பு. இப்படிப் பட்ட பெண்ணுக்கு மாப்பிள்ளை கிடைப்பது அரிதில்லை. ஆனால், ஏதோ சாப்பாட்டுக்காவது கவலையில்லாத ஓரிடம் அகப்பட வேண்டுமென்று விரும்பினான் மாடசாமி. தங்கம்மாளுக்கு வயது இருபத்திரண்டு நிரம்பியதும் அவளுடைய வாழ்க்கையில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டு விட்டது. அந்த ஊரில் நடந்த ஒரு கல்யாணத்துக்காக வந்திருந்த ஒருவர், தங்கம்மாள் வீட்டுக்குத் தூரத்து உறவு. அவர் மூலம் தங்கம்மாளின் கல்யாணம் நிச்சயமாகிவிட்டது.

ஏழாயிரம் பண்ணை என்ற ஊரில் செல்வமும் செல்வாக்கு மாக வாழும் ஒரு வாலிபனுக்கு எப்படியோ தங்கம்மாளைக் கல்யாணம் செய்துவைத்து விட்டார் அந்த மனிதர். மாப்பிள்ளை வந்து பெண்ணைப் பார்த்தான்; மறு பேச்சுச் சொல்லாமல் ஒப்புக்கொண்டு விட்டான். விமரிசையாகக் கல்யாணம் நடந்தது. பாலம்மாளும், மாடசாமியும் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. பிறந்த வீட்டின் வறுமையானது, மறு வீட்டுக் கல்யாணம், தலைத் தீபாவளி அழைப்புப் போன்ற மரியாதைகளுக்கு இடம் தரவில்லை. அதைப்பற்றி ஏழாயிரம் பண்ணை மாப்பிள்ளையும் கவலைப் படவில்லை. அதற்குப் பதிலாக அவன் தன் மாமியாரையும் (தங்கம்மாளின் தாயார்), மைத்துனன் செல்லத்துரையையும் தன் வீட்டுக்கு அழைத்து வைத்துக்கொண்டான். பெரிய பண்ணை. இவர்கள் போனதனால் அங்கே நஷ்டம் எதுவும் ஏற்படப் போவதில்லை. எல்லோரும் அங்கே யாதொரு மனக் குறைவுமின்றிச் சௌக்கியமாக இருந்து வந்தார்கள்.

பாலாம்மாளுக்கு ஒரு குழந்தை பிறந்தது. பிறந்து மறு மாதத்தில் செத்துப் போய்விட்டது. இதை முன்னிட்டு ஏழாயிரம் பண்ணையிலிருந்து மாப்பிள்ளை உட்பட எல்லோரும் வந்து போனார்கள். அந்தச் சமயம் கால மழை பெய்யாததால் நல்ல விளைச்சலில்லாமல் ஊரே பஞ்சத்தில் அமிழ்ந்து கிடந்தது. இதை அறிந்த ஏழாயிரம் பண்ணை மாப்பிள்ளை, மாடசாமியையும் பாலம்மாளையும் விருந்துக்கு அழைப்பதுபோலத் தன் ஊருக்கு அழைத்தான். கட்டா யத்தின்பேரில் அவன் விருப்பத்திற்கு இணங்கினார்கள். அங்கே போய் மூன்று நாட்கள் கழிந்த பிறகு மாடசாமி மனைவியோடு ஊருக்குப் புறப்பட்டான். அதற்கு ஏழா யிரம்பண்ணைப் பிள்ளையாண்டான், "அண்ணாச்சி! ஊரிலே இப்போது என்ன அவசரம்? அங்கேதான் மழை தண்ணி கிடையாதுன்னு சொல்றீகளே! காலம் செழிச்ச பிறகு போனாப் போச்சு. இங்கேயே ரெண்டுபேரும் இருங்க. இது யாரு வீடு? உங்க தம்பி வீடுதானே?" என்று அன் போடு சொன்னான். அதற்கு மாடசாமி சம்மதிக்கவில்லை.

தனக்குச் சகலனாக வாய்த்தவன் நல்லவன்தான் என்றாலும் சகலன் வீட்டில் பிழைப்புக்காக வந்து மனைவியோடு உட்கார்ந்திருக்க அவனுக்குப் பிடிக்கவில்லை. பாலம்மாளின் அபிப்பிராயமும் அப்படியேதான் இருந்தது. அதனால் தம்பதிகள் ஒரேயடியாகத் தலையைக் குலுக்கிவிட்டு அன்று மாலையிலேயே சொந்த ஊருக்குக் கிளம்பி விட்டார்கள். புறப்படும்போது, மிகமிகக் கட்டாயப்படுத்தி நான்கு மூட்டை கம்பும், இரண்டு மூட்டை நெல்லும் வண்டியில் போட்டு அனுப்பினான் ஏழாயிரம்பண்ணை மாப்பிள்ளை. தங்கம்மாள் தன் அக்காளுக்கு ஒரு ஜோடி புஷ்பராகக் கம்மல் போட்டு அனுப்பினாள். ரூபாய்க்கு ஏழுபடி அரிசி விற்கும் அந்தக் காலத்திலும் அந்தக் கம்மல் குறைந்தது நாற்பதுரூபாய் பெறும். ஊருக்கு வந்த அந்த வருஷத்தை ஓரளவு கவலையில்லாமல் கழித்தார்கள் மாடசாமியும் அவன் மனைவியும். அடுத்த வருஷம் வழக்கம்போலக் கஷ்டம்தான். என்றாலும் ஒரு சிறு கடனுக்காகக்கூட மாடசாமி தன் சகலன் வீட்டுக்குப் போகவில்லை. கடனுக்காகப் போகாதது டன், உறவு முறையை ஒட்டிச் சாதாரணமாகப் போய் வருவதும், கிடையாது. பணக்காரன் வீட்டுக்குச் சும்மா போனாலும், தயவை நாடிப் போனதுபோலவே உலகத்தார் நினைப்பார்கள் என்ற கருத்துடன் வருஷக் கணக்கில் ஏழாயிரம் பண்ணைக்குப் போகாமலிருந்தான் மாடசாமி.

இரண்டு வருஷங்களுக்குப் பிறகு பாலம்மாளுக்கு ஒரு மகன் பிறந்தான்; அதே வருஷத்தில் தங்கம்மாளுக்கும் ஒரு மகன் பிறந்தான்; பிள்ளையைப் பார்த்துவிட்டு வருவதற்காக மாடசாமியும் பாலம்மாளும் சென்றனர். ஏழாயிரம் பண்ணைக்காரன் வழக்கம்போலப் பிரியமாகவே வரவேற்றான். "அடிக்கடி வருவதுகூட இல்லை. ஏதோ, என்னைத் தள்ளி வைத்துவிட்டீர்கள் போலிருக்கிறது!" என்றுகூடச் சொன்னான். அவன் என்றும்போல இருந்தாலும் தங்கம்மாளின் குணம் மட்டும் மாறிவிட்டது. பணக்காரனுக்கு வாழ்க்கைப்பட்டிருக்கிறோம் என்ற செருக்கு வந்துவிட்டது. அவளுடைய பேச்சுத் தோரணை, குரல், நடை எல்லாமே மாறிவிட்டன. அக்காளை அக்காள்

என்று கூப்பிட்டாலும், மாடசாமி, தன் தாய்மாமனை, 'மாமா' என்று அழைக்க வெட்கப்பட்டான். ஒரு சந்தர்ப்பத்தில் அக்காளைப் பார்த்து, "கம்மல் எங்கே அக்கா?" என்று கேட்டாள். பாலம்மாள் தலைகுனிந்தாள். வெகு நேரத்திற்குப் பிறகு, "ஊரில் இருக்கிறது" என்றாள்.

"ஊரில் இருந்தால் காதில் போட்டுக்கொள்வதற்கு என்ன?" என்று கேட்டாள் தங்கம்மாள்.

பாலம்மாள் உண்மையைச் சொல்லிவிட்டாள். போன வருஷம் குடும்பச் செலவுக்காகப் பத்து ரூபாய்க்குக் கம்மல் அடகு வைக்கப்பட்டது. மாதம் ஒன்றுக்கு ரூபாய்க்கு ஒரு அணு வட்டி. இந்தச் செய்தியறிந்து தங்கம்மாள் மிகவும் கோபப்பட்டாள். தான் இனமாகக் கொடுத்த கம்மலை, அருமை தெரியாமல் அடகுவைத்துவிட்டதாக மனதிற்குள் கடிந்து கொண்டாள். பிறகு, "அக்கா! அதிர்ஷ்டம் கிடைத்தாலும், அதை ஆளக் கொடுத்து வைக்கவேண்டும்" என்று குத்தலாகச் சொன்னாள். இதை உணராத பாலம்மாள், "நீ சொல்வது வாஸ்தவம், தங்கம்" என்று சொன்னாள். ஊருக்குக் கிளம்பும்போது கம்மலை மீட்டுக் கொள்ளப் பத்து ரூபாய் கொடுத்தனுப்பினாள் தங்கம்மாள். அப்படியே ஊருக்கு வந்ததும் பாலம்மாள் கம்மலை மீட்டினாள். ஆனால், இரண்டு மாதங்களில் அதை பழைய படியும் அடகு வைக்கும்படி நேர்ந்தது. பாலம்மாள் குடியிருந்த கூரைவீடு அடை மழையினால் சரிந்து விழுந்து விட்டது. அதைப் பழையபடியும் கட்டிக் கூரை போடுவதற்காக முப்பது ரூபாய்க்கு அதே ஓர் அணு வட்டிக்கு வேறொரு ஆள் வசம் அடகு வைத்தார்கள். அப்பொழுது அவளுக்குக் கண்ணீர் வந்தது. ஒரு வருஷம்கூடத் தொடர்ந்து காதில் போட்டுக்கொள்ள முடியாத தன் நிலையை எண்ணி வேதனைப்பட்டாள். சில பக்கத்து வீட்டுக்காரர்கள் இதைக் கண்டு கேலிசெய்தனர். "குடிக்கக் கஞ்சியில்லை; காதுக்குப் புஷ்பராகக் கம்மல் கேட்கிறதாக்கும்! இரண்டு மாதம் காதில் போட்டுக் குலுக்கினாள். இரண்டு

மாத வாழ்வுதான். பிறகு? பழைய குருடி கதவைத் திறடி!'' என்று பலவாருகப் பேசிக்கொண்டார்கள்.

பாலம்மாளின் காதில் சுமார் மூன்று மாத காலம் கூடத் தொடர்ந்தாற்போல் கம்மல் போட்டுக் கொள்ள முடியாது போய்விட்டது. குடும்பத்தின் வறுமை ஒவ்வொரு வருஷமும் ஒன்றுபோலவே இருந்தது. சீர்ப்படுவதற்கு வழியில்லை. இதைவிடக் கீழான நிலை அடையவும் வழியில்லை. இதைவிடக் கீழான நிலை ஒன்று இருந்தால் தானே?

வருஷங்கள் பல சென்றன. பாலம்மாளுக்கு வயது நாற்பதாகிவிட்டது. பாலம்மாளின் மூத்த மகனுக்கு இப்பொழுது வயது பதின்மூன்று; இவனைத் தவிர ஆணும் பெண்ணுமாக ஐந்து குழந்தைகள் இருந்தார்கள். குடும்பத்தைக் காப்பாற்ற இரவும் பகலும் ஒய்வொழிச்சல் இல்லாமல் பாலம்மாளும் மாடசாமியும் வேலை செய்து வந்தார்கள். கம்மல் இப்பொழுதும் ஓரிடத்தில் அடகு வைக்கப்பட்டிருந்தது. அகவிலைகள் ஏறிவிட்டன. குழந்தை குட்டிகள் அதிகமாகி விட்டதால், அரை வயிற்றுக் கஞ்சி கூட, ஒரு நாள் கிடைத்ததுபோல ஒரு நாள் கிடைப்பதற்கு வழியில்லாமல் போய்விட்டது. பாலம்மாளின் தாயாரும் செத்துப்போய்விட்டாள். ஏழாயிரம்பண்ணைக்கு இவர்கள் போய்வருவது நின்று ஏழெட்டு வருஷங்களுக்கு மேலாகின்றன. செல்லத்துரை வாலிபனுகிவிட்டான். ஒரு பண்ணை வீட்டில் சம்பளத்துக்கு வேலைபார்த்து, அங்கேயே தன் சாப்பாடு முதலியவற்றையும் கவனித்துக்கொண்டான். இப்படியாக இருந்துவரும்போது ஊரில் கிராம தேவதைக்குத் திருநாள் கொண்டாட ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. திருநாளுக்காவது கம்மல் போட்டுக் கொள்ள வேண்டுமென்று பாலம்மாளுக்கு ஆசை. ஆனல் மீட்பதற்குக் கையில் தம்பிடிகூட இல்லை. அத்துடன் திருநாளின்போது செலவுக்கு ஒரு ஐந்து ரூபாயாவது வேண்டும். என்ன செய்வது என்று திகைத்துக்கொண்டிருந்தாள். சில சமயங்களில் கண்ணீர் விட்டும் அழுது

புலம்பினுள். 'ஆசைதீரக் கம்மல் வைத்துக்கொள்ள அதிர்ஷ்டம் இல்லையே! காதில் நகை இல்லாமல் இரண்டொரு கல்யாணங்களுக்குக்கூட வெளியூர் செல்ல முடியாமல் போய்விட்டது. நல்ல நாள் வருகிறது. நான் மூளியாக இருக்க வேண்டியிருக்கிறது. கம்மல்தான் போய்விட்டதே, என்...'

இதற்குமேல் அவளால் நினைக்கக்கூட முடியவில்லை. விஷயம் என்னவென்ருல் அவள் கழுத்தில் இப்போது தாலி கூட இல்லை. தாலித் தங்கத்தையும் சாப்பாட்டுக்காக ஒரு சமயம் விற்றுவிட்டார்கள். வெறும் மஞ்சள் கயிறுதான் புடவையின் மறைவில் கிடந்தது. பாலம்மாள் பரிதாபகரமாக அழுதாள். மறுநாள் விடிந்ததும் தம்பி செல்லத்துரையிடம் போனுள். அவனுல் முப்பது நாற்பது ரூபாய் என்று கொடுக்க இயலாது. அவன் சம்பாத்தியம் அவன் வயிற்றுக்குத்தான் சரியாக இருந்தது. இருந்தாலும் யாரிடமோ ஓர் ஐந்து ரூபாய் மட்டும் கைமாற்று வாங்கித் திருநாள் செலவுக்காக அக்காளிடம் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்டு வரும் வழியில், கம்மல் அடகு வைக்கப் பட்டிருந்த வீட்டுக்குப்போய், திருநாளுக்கு மட்டும் காதில் வைத்துக் கொள்ளுவதற்காகக் கம்மலைக் கொஞ்சம் கொடுத்து வாங்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். அவள் வேண்டுகோள் கை கூடிவிட்டது. கம்மலை வாங்கி இரண்டு நாள் காதில் வைத்திருந்தாள்; திருநாளும் முடிந்தது. மூன்ரும் நாள் கம்மலைக்கேட்க ஆள் வந்துவிட்டது. தூக்கில் போடப்போகும் மகனைக் கடைசிக் காலத்தில் கட்டித் தழுவி விட்டு, வழியனுப்பவதுபோல் அவ்வளவு துயரத்துடன் மூச்சுப் பேச்சில்லாமல் கம்மலைக் கழற்றிக் கொடுத்தனுப்பினுள். அப்புறம் இரண்டு வருஷ காலத்துக்குள் கம்மலு மீட்டுவிட்டார்கள். ஆனுல்...

பாலம்மாளின் மூத்தமகன் ஒரு தடவை குப்பைவண்டி ஓட்டிக்கொண்டு போகும்போது, வண்டி குடை சாய்ந்து விட்டதால், கீழே விழுந்து கையை ஒடித்துக்கொண்டான். அவனுக்குச் சிகிச்சை செய்வதாகக் கம்மல் ஐம்பது

ரூபாய்க்கு அடகு வைக்கப்பட்டது. அப்புறம் அவனுக்குக் கை சரிப்பட்டுவிட்டது; ஆனால் கம்மல்மட்டும் வருஷக் கனக்கில் மீட்கப்படாமலே இருந்தது. வட்டியும் வளர்ந்து கொண்டே வந்தது.

பாலம்மாளின் மூத்த மகனுக்கு வாலிபம் வந்தது. பாலம்மாளின் மகளுக்குக் கல்யாணமாகி இரு குழந்தை களும் இருக்கிறார்கள். மாடசாமி கிழவனாகிவிட்டான். ஆனால் கம்பு ஊன்றிவிடவில்லை. ஒருநாள் கூட ஓய்ந்து உட்காராமல் வேலை செய்து வந்தான். "என்கட்டை உள்ள மட்டும் எனக்குப் பாடுபடச் சக்தி உண்டு. அடுத்தவன் உழைப்பிலே ஒருவேளை கஞ்சிகூட இந்த மாடசாமியால் குடிக்கமுடியாது. பாடுபடச் சக்தி இல்லாவிட்டால் செத் துப்போகலாமே! அப்புறம் இந்தக் கட்டையால் என்னடா பிரயோஜனம்?" என்று சொல்லிக்கொண்டே வாலிபனைப் போல வேலை செய்து வந்தான். இந்தச் சமயத்தில் பாலம் மாளின் மகன் பட்டாளத்தில் சேர்ந்தான். மாதா மாதம் பணமும் அனுப்பிவந்தான். அதை வைத்துக்கொண்டு குடும்பம் சற்றுக் கவலையில்லாமல் காலம் தள்ளியது. அவன் ஒருமுறை லீவில் வருவதாகக் கடிதம் எழுதியிருந்தான். அதே சமயத்தில் தங்கம்மாளின் பேத்திக்குக் கல்யாணம் என்று கடிதம் வந்தது. கல்யாணத்திற்குப் போய்வர வேண்டுமென்று இங்கே தீர்மானம் செய்தார்கள். தக்க சமயத்தில் மகனும் லீவில் வந்தான். வரும்போது நூற் றைம்பது ரூபாயும் கொண்டுவந்தான். தாயாருக்குச் சேலை, தகப்பனுருக்கு வேட்டி, மற்றவர்களுக்கும் துணிமணிகள். இவ்வளவுக்கும் ஐம்பது ரூபாய் வரையில் செலவாகிவிட் டது. கடைசியில் கம்மலை மீட்கவும் தீர்மானித்தார்கள். பத்துவருஷ காலம் அடகில் கிடந்த கம்மல் வட்டியும் முதலுமாகச் சுமார் எழுபத்தைந்து ரூபாயைச் சுமந்து கொண்டிருந்தது. பரவாயில்லை என்று ரூபாயைக்கொடுத்து மீட்டு விட்டார்கள்.

பாலம்மாளுக்கு இப்பொழுது சரியாக அறுபதுவயது. புதுப் புடவை உடுத்திக் கம்மலையும் வைத்துக்கொண்டு

கல்யாணத்துக்கு கிளம்பினுள். இந்த முதுமையில் அந்த வெள்ளைக் கம்மல் அவ்வளவு பொருத்தமாகத் தோன்ற வில்லை. பார்ப்பதற்குச் சற்று விகாரமாகக்கூட இருந்தது. இருந்தாலும் அதை அவள் பொருட்படுத்தவில்லை.

கல்யாணத்திற்குப் போனுர்கள். தங்கம்மாளும் கிழவியாகமாறிவிட்டாள். வயது காலத்தில் தனக்கு வைரக் கம்மல் எதற்கு என்று சிவப்புக்கல் கம்மல் வைத்துக்கொண் டிருந்தாள். இதைப் பார்த்ததும் பாலம்மாளுக்கு அதிசய மாகக்கூட இருந்தது. கல்யாணம் முடிந்து ஊருக்கு வந் தார்கள். பாலம்மாளுக்கு வெள்ளைக்கல் கம்மலைப் போட்டுக் கொள்ள மனமில்லை. தாயாரைப் பார்க்க மகனுக்கே விகாரமாக இருந்தது. நகரவாசிகள் என்றுல் விகாரமாக இருந்திராது. ஆனுல் பழைய கால முறைப்படியே வாழ்க்கை நடந்துவரும் கிராமச் சூழ்நிலையில் அறுபது வயதுக்கிழவி புஷ்பராகக் கம்மல் வைத்துக்கொண்டிருப்பது பார்க்கிறவர் களுக்குக் கொஞ்சம்கூடச் சகிக்கவில்லை. “கிழவிக்கு ஆசையைப் பார்த்தாயா? பாட்டி, நல்ல வாலிப மாப்பிள்ளை ஒருவன் இருக்கிருன், கல்யாணம் பண்ணிக்கொள்கிருயா?” என்று சில இளம் பெண்கள் கேலி செய்தார்கள். சில பெண்கள், “பாட்டி! உன் காலம் போய்விட்டது. இனி வீட்டுக்கு வரும் மருமகளுக்குக் கம்மல் போட்டுப் பார்க்க வேண்டுமே ஒழிய, நீ போட்டுக்கொள்வது அழகாயில்லை” என்று சொன்னுர்கள். கம்மலைப் பணம் கொடுத்து மீட்டிய மகனுக்கே, அம்மாவைக் கம்மலோடு பார்க்கப் பிடிக்க வில்லை.

ஒருநாள் அயல்வீட்டில்போய் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள் பாலம்மாள். அப்புறம் வீட்டுக்கு வரும் போது வேறொருவீட்டுக்கு ஒரு காரியமாகப் போனுள். இவள் வீட்டுக்குள் நுழையும்போது, உள்ளே இவளைப் பற்றியே பேச்சு நடந்துகொண்டிருந்ததால் அங்கே நின்று கவனித்துக் கேட்டாள். உள்ளே பேசிக்கொண்டிருந்தவர்கள் எல்லோரும் பெண்களே. பேச்சின் நடுவில் ஒருத்தி, “பாலம்மாக் கிழவி வெள்ளைக் கம்மலோடு அலைவதைப்

பார்த்தால், தேவடியாள் வீட்டுக்கிழவி மாதிரி இருக்கிறது. இல்லையா? தேவடியாள் வீட்டுக் கிழவிதான் வாலிபப் பெண்ணைபோல நகை போட்டுக் குலுக்குவாள்'' என்று சொல்ல, எல்லோரும் சிரித்தார்கள். மார்பில் அம்பு தைத்தது போலிருந்தது பாலம்மாளுக்கு. நேராக வீட்டை நோக்கி வந்தாள். விறுவிறு என்று உள்ளே போய்க் கம்மலைக் கழற்றி அடுக்காளைப் பானைக்குள் வைத்தாள். வைத்துவிட்டு வெளியே வரும்போது, மகன் எதிரே வந்தான். அம்மாவைப் பார்த்ததும் அவனுக்குத் திகைப்பு உண்டாகிவிட்டது. ஒரு விநாடி மௌனமாக இருந்தான். பிறகு ஒரு மாதிரி வலுக்கட்டாயமாகச் சிரித்துக்கொண்டு, "கம்மல் எங்கே அம்மா?'' என்று கேட்டான்.

பாலம்மாளும் வலுக்கட்டாயமாகச் சிரித்துக்கொண்டு பேச்சை ஆரம்பித்தாள்: "கம்மல் எனக்கு எதற்கடா இனி? உனக்குப்பெண்டாட்டியாய் வருகிறவளுக்குப் பத்திரமாய் வைத்திருக்கிறேன். எனக்கு இந்த வயது காலத்தில் கம்மல் எதற்கு? உன் பெண்டாட்டிக்காக வைத்திருக்கிறேன்... உன் பெண்டாட்டிக்காக.........''

பாலம்மாளால் தொடர்ந்து பேசமுடியவில்லை. என்ன முயற்சி செய்தும் பொய்ச் சிரிப்புச் சிரிக்க முடியவில்லை. உதடுகள் துடித்தன. சுவரைப் பார்த்துத் திரும்பிக் கொண்டு மேல்மூச்சுக் கீழ்மூச்சு வாங்க, கொதிக்கின்ற கண்ணீரைச் சிந்தினாள். மறுநிமிஷமே முகத்தை துடைத்துக்கொண்டு, மகனைப் பார்த்துத் திரும்பி, சிரமப்பட்டுப் புன்னகை செய்துகொண்டு, "எனக்கு எதற்கு இனிக் கம்மல்? உன் பெண்டாட்டிக்குத்தாண்டா அது'' என்று சொன்னாள் பாலம்மாள்.

மகன் தனியே இருக்கும்போது, "பாவம்! அம்மா ஒரு வருஷம்கூடத் தொடர்ந்தாற்போலக் கம்மல் வைத்துக் கொள்ள ஆசையில்லாமல் போய்விட்டது'' என்று ஒரு முறை தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.



